# வால்மீகியின் ராமன்

ஸ்ரீ ராமனைப்பற்றி ஈ. வெ. ரா.—ராதா முதலியோர்
செய்துவரும் விபரீதப் பிரசாரங்களுக்கு
தக்க பதிலளிக்கப்பட்டிருக்கிறது

KM70442



சிந்தனைச் சுடர்—2

முதற் பதிப்பு 27-1-56, காப்பிகள் 2,000

காபிரைட்

## முன்னுரை

சு. ம. இயக்கத்தின் பெயரால் பொய்ப் பகுத்தறிவையும் அயோக்கியத்தனமான, உண்மையற்ற, வஞ்சகவாதங்களையும் பேசி, எழுதி, தமிழர்களைக் கரையேற்றுவதாகச் சொல்லிக்கொண்டு, அவர்கள் மதித்துவரும் நூற்களுக்கும் பெரும் கேட்டை விளைவித்து, அவர்களுக்குள் பரஸ்பர துவேஷத்தையும், கலகத்தையும் மூட்டிவிட்டு, அவர்களைப் படுகுழியில் விழ்த்தி, நாட்டின் அமைதியையும் இன்ப வாழ்வையும் சீர்குலையச் செய்து வரும் நாசகாரக் கும்பலின் விஷம வாதங்களை அம்பலப்படுத்தி அதன் கொட்டத்தை ஒடுக்கி, தேச, சமூக, மத நல் வாழ்வுகளை ஊன்றி வளரச் செய்ய வேண்டுமென்பதே நம் பேரவா. இதைப்போல் பல விஷயங்களடங்கிய சிறிய, பெரிய நூல்களை மிகக் குறைந்த விலையிலும், இலவசமாகவும், லக்ஷக்கணக்கில் பரப்பி தேச, சமூக, மத தர்ம ஸேவை செய்ய முனைந்துள்ள நமக்கு இறைவன் துணையும், தர்மாசார்யர்களுடைய கிருபையும், பொது மக்களின் பேராதரவும் என்றும் கிட்டட்டும்.

தார்மிக ஹிந்து மிஷன்
சென்னை-15

Rajah Power Press, Royapettah, Madras-14

ஸ்ரீ:

# ஸ்ரீ வால்மீகியின் ராமன்

972

ஸ்ரீ ராமனைப்பற்றி ஈ. வெ. ரா.—
ராதா முதலியோர் செய்துவரும்
விபரீதப் பிரசாரங்களுக்கு தக்க
பதிலளிக்கப்பட்டிருக்கிறது

With the hearty compliments
to Sri Sau. Ganesan MA
Jagannathacharya
author

து. க. ஜ.

9.5.67



வெளியீடு :

தார்மிக ஹிந்து மிஷன்

சென்னை—15

# வாசகர்கள் சிந்தனைக்கு

சில விஷமிகளாலும், நல்ல எண்ணம் கொண்டு தொண்டு செய்து வருபவர்களாகச் சொல்லிக் கொள்ளுபவர்கள் பலராலும் ஸ்ரீ வால்மீகி ராமாயணக் கருத்துக்கள் எத்தனை வகைகளில் சிதைக்கப்பட்டுவருகின்றன வென்பதை உள்ளபடி உணர்ந்தவர்கள் எவரும் வால்மீகி கண்ட ஸீதை, ஸ்ரீ வால்மீகியின் ராமன் போன்ற நம் இச்சிறிய நூற்களை வரவேற்காமலிருக்க முடியாது. எவ்வளவு திறமையாக எடுத்துரைத்தாலும் அஸத்துக்கள் திருந்தப்போவதில்லை என்ற காரணத்தினால் தவருன வாதங்களுக்குப் பதிலுரைக்காமலிருப்பது, நம் சாதாரணப் பொதுமக்கள் அவர்களுடைய துர்வாதப் படுகுழியில் விழ இடம் கொடுத்ததாக ஆகும். படித்தவர்களும் கலங்கும்படியான சந்தர்ப்பங்களை அவர்கள் சுட்டிக் காண்பிக்கும்பொழுது நம்மால் உதாஸீனமாக இருக்கமுடியவில்லை. ஸ்ரீவால்மீகி ராமாயண உரையாசிரியர்களுடைய போக்கையும் சிறிது விசாரம் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது.

பலவித நிர்ப்பந்தங்களைக்கொண்டு வரையப்பட்ட இச்சிறிய நூற்களைப் பொதுமக்கள் திரவிய உதவிசெய்தும், ஊன்றிப்படித்து அவரவர்களுடைய அபிப்ராயங்களை நமக்கு அறிவித்தும், ஆதரிக்கவேண்டுமென்பது நம் ஆசையும் பிரார்த்தனையுமாகும்.

**தார்மிக ஹிந்து மிஷன்**

**சென்னை-15**

ஸ்ரீ:

# ஸ்ரீ வால்மீகியின் ராமன்

ஸ்ரீ ராமனை உலகிற்கு முதன் முதலாகக் காண்பித்தவர் ஸ்ரீ வால்மீகி மஹாமுனிவர். ராமனே, தன் பத்னி ஸீதையுடனும், தம்பி லக்ஷ்மணனுடனும், தண்டகாரண்யம் போகும் பொழுது அவருடைய ஆசிரமத்திற்கு வந்திருக்கிறார். பிறகு நடந்த வரலாறுகளும் அவருக்குத் தபோவலிமையால் நன்றாகத் தெரியும். தந்தையின் வீட்டிற்குப் பெண்கள் பிரஸவத்திற்கு வருவது போல் ஸ்ரீ ராம பட்டாபிஷேகத்திற்குப் பின் ஸீதையும் (ராமனால் காட்டிற்கு அனுப்பப்பட்டு) அவருடைய ஆசிரமத்திற்கு வந்து அதன் பக்கவிலேயே வசித்திருக்கிறாள். அருமைப் புதல்வர்களிருவரையும் பெற்றிருக்கிறாள். அவர்களை அவரே பாட்டனார் ஸ்தானத்திலிருந்துகொண்டு அருமையாகவும் பேரன்புடனும் வளர்த்து வந்திருக்கிறார்.

ஆயினும் ராமனைப் பற்றிய பல உண்மைகளை குரு-சிஷ்ய பாவத்தில் நாரத மஹா முனிவரைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வால்மீகி முயன்றார். கர்ப்பிணியாகிய தம் உயர்ந்த மனைவியைக் காட்டில் விட்டுவிடுமாறு ராமன் செய்தது வால்மீகியின் உள்ளத்தைச் சற்று கலக்கிவிட்டது போலும்! ஆனால் அவருடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்யும் முறையில் நாரதர் பதில் கூறவில்லை. பொதுவாகவே ராம சரித்திரத்தை அவர் சொல்லி முடித்துவிட்டார். பிறகு ப்ரஹ்மாவினுடைய அனுக்ரஹ வலுவினால்தான் வால்மீகியின் மனம் உள்ளபடி தெளிந்தது. தர்ப்பாஸனத்தின்மீது உட்கார்ந்து தியானயோகத்தில் ஆழ்ந்தவுடன் வால்மீகி மஹாமுனிவருக்கு ராமனுடைய வாழ்க்கையிலுள்ள எல்லா நுட்பங்களும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் பிரகாசித்து விட்டன. அப்படித் தாம் கண்டுகொண்ட ராமனை உள்ளபடி உலகமும் அனு

பவிக்குமாறு தமது ஸ்ரீ ராமாயணத்தின் மூலம் அவர் உதவியிருக்கிறார்.

அவர் கண்டுகொண்ட ராமனை அவர் தெரிவித்திருக்கிறபடி அறிந்து அனுபவிக்கப் புண்ணியமும் நேர்புத்தியுமற்ற சிலர், அவர்மீது பழியைச் சுமத்தி உண்மைக்கு மாறாக, தங்களுடைய விபரீத, மட்டரக, சொந்தக் கற்பனைகளையே உலகில் பரப்ப முனைந்திருக்கின்றனர். அப்படிப்பட்டவர்கள் கம்பர் பிறந்து வளர்ந்த நாட்டிலேயே தோன்றியிருப்பது தான் அதிகமாக அதிசயிக்கத்தக்கதாயும், மிகுந்த மனவருத்தத்தை உண்டு பண்ணக் கூடியதாயுமிருக்கிறது. மனச் சாக்ஷி யென்பதையே அடியோடு துறந்த அக்கோஷ்டியினர் தமிழ் நாட்டினுடைய தன்மானத்தைப் பாதுகாக்கத் தாங்களே பிறந்தவர்களெனப் பறை சாற்றிக் கொள்ளுகின்றனர். இது தான் விந்தையிலும் விந்தை!

அவர்களைத் தவிர வேறு ரக வால்மீகி ராமாயண விரோதிகளுமிருக்கின்றனர். ராமனைச் சிறப்பிப்பதாகச் சொல்லிக்கொண்டு அவனுடைய உண்மை நிலையை அறியாமல் தங்களுடைய மனம் போனபடியெல்லாம் பேசியும் எழுதியும் வருகின்றனர்.

ஸ்ரீ ராமன் பகவா (கடவுளி)னுடைய அவதாரம் அல்ல என்று இவ்வெல்லா கோஷ்டியினர்களும் சாதிக்க முற்படுகின்றனர். தங்களுடைய சொந்தக் கருத்தாக இதைச் சொல்லுபவர் சிலர். இதை வால்மீகியின் அபிப்பிராயமாகவே துணிந்து கூறுபவர் சிலர். எவர் கருத்தாயிருந்தாலும் அது இருக்கட்டும். இதனால் அவர்கள் சாதிக்க முற்படும் கொள்கை என்னவென்பதுதான் நமக்கு விளங்கவில்லை. கடவுளில்லையெனப் பிரசாரம் செய்கிறவர்கள் கூறுவதிலாவது கொஞ்சம் அர்த்தம் உண்டு. தெய்வத்தையோ, அதன் அவதாரத்தையோ வழிபடக் கூடாது என்ற கொள்கையை ஊன்றவைக்க முயலுகிறவர்களாக அவர்களைக் கருதலாம். கடவுள் நம்

பிக்கை உள்ளவர்கள் ஏன் இதை மறுக்கின்றனர் என்பதுதான் நமக்கு ஆச்சரியகரமாயிருக்கிறது! கடவுள் அவதாரம் கிடையாது என்று சொல்லுவது கடவுள் தன்மையையும் சக்தியையும் மறுப்பதற்கு ஒப்பாகவே ஆகும்.

### ராமன் பகவானுடைய அவதாரமே

தான் அவதார புருஷன், கடவுள் என்பதற்காக ராமன் எத்துறையிலும் மனிதனுடைய இயற்கையை மீறி நடக்கவில்லை. தனிச் சலுகையையும் விரும்பவில்லை. கடவுள் அவதாரமாயிருந்தாலொழிய ராமனுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட இடைஞ்சல்களை மன அமைதியுடன் வேறு எந்த சாதாரண மனிதனும் கௌரவமாகச் சமாளித்திருக்கமுடியாது என்ற நிலைமையை உணர்த்த ராமனைச் சிலர் அவ்வாறு புகழ்ந்திருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுதும்கூட அவர்களை மறுத்து அவதாரவாத விரோதிகள் அடையப்போகும் பயன் எதுவுமில்லை. அதனல் ராமன் மனித வாழ்க்கையை முறைப்படி நடத்திக் காட்டிய உயர்ந்தவன் என்பதை மறுக்கப்போவதுமில்லை, மறுக்க ஆதாரமும் கிடையாது. அவதாரம் என்பதும், இல்லை என்பதும் வெறும் வாதவிரோதங்களுக்காகப் பேசப்படலாமேயொழிய, ராமனுடைய உயர்ந்த நடத்தையைக் குறைத்துக் கூறப் பயன்படப் போவதில்லை என்பதுமட்டும் நிச்சயம்.

ராமன் பகவானுடைய அவதாரம் என்பதைப் பல தடவைகளில், வெவ்வேறு இடங்களில் மறைவாகவும், நேராகவும் வால்மீகி மஹாமுனிவர் குறிப்பிட்டிருக்கிறார்.

தங்கள் தங்களுடைய ஹவிர்ப் பாகங்களைப் பெற தசரதர் யாகத்திற்கு ப்ரஹ்மா முதலிய தேவர்களனைவரும் அங்கு வந்தனர். ஸ்ரீமந்நாராயணனை மஹாவிஷ்ணுவும் அங்கு வந்தார். ராவணன் முதலிய ராக்ஷஸர்களிடமிருந்து தங்களுக்கு ஏற்பட்டுவரும்

தொல்லைகளைத் தீர்த்துவைக்குமாறு தேவர்கள் ப்ரஹ்மமுகமாக மஹாவிஷ்ணுவைச் சரணாகதி செய்து பிரார்த்தித்தனர். தசரத குமாரனாக அவதரித்து, ராவணாதிகளைக் கொன்று அவர்களைக் காப்பாற்றுவதாகவும், பிறகு இப்பூவுலகில் பதினோராயிரம் வருஷங்கள் ராஜ்ய பரிபாலனம்கூடத் தான் செய்யப்போவதாகவும் அவர் கூறியதாக வால்மீகி அறிவித்திருக்கிறார். ராமன் கடவுள் அவதாரம் என்பது வால்மீகியின் அபிப்ராயம் என்று நிரூபிக்க இவ் வரலாறு ஒன்றே போதுமானது.

அவ் விஷயங்கள் ஒருபுறமிருக்கட்டும். ராமன் தன் வாழ்க்கையில் எவ்வாறு நடந்துகொண்டான் என்பதையும், அவனைப் பற்றிப் பல வம்பர்கள் கூறும் அபவாதங்கள் பொருந்துமா என்பதையும் இனி விசாரிப்போம்.

### ராமன் பெரு வீரன்

"......இராமனை ஒரு நீதிமானாகவோ, ஒரு வீர புருஷனாகவோ குறைந்த அளவுக்காவது ஒரு சராசரி மனிதத்தன்மைக்கு மேற்பட்ட யோக்யதை கொண்ட மனுஷனாகவோகூட மக்கள் கருதும்படி அவர் (வால்மீகி) எழுதவே யில்லை......"(விடுதலை - சென்னைப் பதிப்பு 22-8-54 ஈ. வே. ரா.-வின் இராமாயண ஆராய்ச்சி)

இவ்வபிப்ராயம் ஒன்றே ஈரோட்டு ஈ. வே. ராமசாமி நாயக்கரின் முட்டாள்தனத்தை, பச்சைப் பொய்யை உறுதிப்படுத்தப் போதுமான சான்றாகும். முட்டாள்தனமென்பது அறியாமையால் ஏற்படக் கூடியது. பச்சைப் பொய் என்பது தெரியாமல் சொல்லப் படுவதல்ல. அளவு கடந்த கர்வத்தினால், கெட்ட எண்ணத்துடன், பொதுமக்களை முட்டாள்களென்று நினைத்துக் கொண்டு அயோக்கியத் தனமாகப் பேசப் படும், எழுதப்படும் விஷயங்களே பச்சைப்பொய் என்ற சொற்களால் குறிப்பிடப்படும். இப்படி நாயக்கர் கூறுவது அந்தப் பச்சைப் பொய் ரகத்தில் சேர்ந்ததாகத்தான் இருக்கிறது.

அவ்வபிப்பிராயங்களைத் தம்முடையதாக நாயக்கர் கூறியிருந்தாலும் அவரை ஒருவாறு மன்னித்து உதாஸீனம் செய்துவிடலாம். ராமனை ஒரு நீதிமானாகவோ வீரனாகவோ வால்மீகியே கூறவில்லை என்று சொன்னால் அதைப் பச்சைப் பொய், வெறும் அயோக்கியத்தனம் என்று சொன்னால் போதாது. அவருடைய் பாஷையிலேயே 'டபிள்-வடிகட்டிய-கெட்டியான-வெகு மோசமான-போக்கிரித் தனம்' என்று சொன்னாலும் தகும்.

தேவர்களாலும், அசுரர்களாலும், மற்ற இப்பூவுலக மன்னர்கள் எவராலும் தூக்கி நிறுத்தி நாணேற்ற முடியாத, மிகுந்த வலுவுள்ள ஓர் வில் ராமனுடைய புஜவலிமையைத் தாங்க முடியாமல் முறிந்து, உலகங்கள் நடுநடுங்கும்படியான பெருத்த சப்தத்துடன், விழுந்தது என்று வால்மீகி வர்ணித்திருக்கிறார். முழு வெள்ளம் கொண்ட நதியின் சீரிய வேகத்தைத் தன் பாணத்தினால் தடுத்து நிறுத்த வல்லமை யுடையவன் ராமன் என்று அகம்பனன் ராவணனிடம் அறிவித்ததை வால்மீகி மஹா முனிவர் தவறாது குறிப்பிட்டிருக்கிறார். வாலி தன் இரு கைகளால் தூக்கி எறிந்த வலுவான ஓர் அசுர சரீரத்தை, தன் வலுவை சந்தேகித்த ஸுக்ரீவனுக்கு நிரூபித்துக் காண்பிக்கும் பொருட்டு, தன் ஒரு கால் கட்டை விரலினால் சுண்டித்தள்ளி வெகுதூரம் போய் விழும்படி செய்தான் ராமன் என்று அவர் கூறியிருக்கிறார். (கரதூஷண வதமும், ராவண வதமும் ஒருபுற மிருக்கட்டும்).

இவைகளை வால்மீகி கூறவில்லை என்றோ, இவைகள் ராமனுடைய 'தோள் வலிமை'யைக் கூறும் வீர காரியங்கள் அல்லவென்றோ ராமசாமி நாய்க்கர் கூறுவாராயின் அது அவருடைய மூளைக் கோளாறை வெளிப்படுத்தும் சொற்களாக ஆகுமே யொழிய உண்மையாக ஒரு பொழுதும் ஆக முடியாது.

'ராமாயணத்தை' வரைந்திருக்கும் இவருடைய வால்கள் ஸ்தானத்திலுள்ள 'தங்கராசு' என்ற தறு தலையும் அதை நடித்துக் காண்பிக்கும் வம்பு நடிகன் ராதாவும் ராமன் முறித்த வில் உளுத்துப் போன வில்லென்று கூறுகின்றனர். அப்படியே அந்த வில் உளுத்த வில்லாக இருக்கட்டும். அதைக்கூட மற்றவர்கள் முறிக்க முடியவில்லை என்றால் என்ன அர்த்தம்? மற்றவர்களைவிட ராமன் பலசாலி அல்ல என்று அதனால் எப்படி மறுக்கப்பட்டதாக ஆகும் என்பதுகூட அந்த அஸமியைப் பிண்டங்களுக்குப் புரியவில்லை போலும்!

**தசரதனின் அசுவமேத யாகமும் ராமன் பிறப்பும்**

'இராமனின் பிறப்பு யோக்கியதை' என்ற தலைப்பின் கீழ் (விடுதலை 28-9-54, பக்கம் 3):

> "இராமன் தான் என்ன. அவன் தகப்பனுக்குப் பிறந்த உத்தம புருஷனா? தசரதனுக்குப் பிள்ளையே இல்லை என்ற காரணத்தால் யாகம் செய்தான். யாகக் குதிரையை வெட்டி அந்த வெட்டப்பட்ட குதிரையுடன் அவன் மனைவி ஆலிங்கனம் செய்து ஒரு இரவு மகிழ்ந்திருந்தாள். பிறகு அம்மனைவிகளை யாகப் புரோகிதர்களுக்குத் தானமாகக் கொடுத்து அவர்களுடன் கலவி செய்து கர்ப்பமுண்டாக்கப்பட்டனர். பின்னர் அவ்வித மனைவிமார்களை அந்தப் புரோகிதப் பார்ப்பனர்களிடமிருந்து அவர்களுக்கு வேண்டிய பொருளைக் கொடுத்துவிட்டு தசரதன் மீண்டும் அடைந்தான். இது வால்மீகி ராமாயணத்தில் உள்ளது. கம்பர் இதைத்தான் பூதம் வந்தது, பாயசம் கொடுத்தது, அதை உண்டவுடன் பிள்ளை பிறந்தது என்று மாற்றி எழுதியிருக்கிறான். இப்படியாக ஆபாச முறையில் தானே இராமனும் அவன் தம்பிகளும் பிறந்தனர். இந்த பிறப்பு இராமன், சாமியின் பிறப்பு என்று கூறுகிறான்"....

என்று ஈ. வே. ராமசாமி நாயக்கர் பேசியதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

இவ்வாறு அவர் பேசியிருப்பதில் எவ்வளவு மூட்டாள்தனமும், 'ஹிமாலய' அயோக்கியத்தனமும், பொய்யும், முன்பின் முரண்பாடும் இருக்கின்றன வென்பதை பொது மக்கள் நன்ருக கவனிக்க வேண்டும்.

> "ராமன் தசரதனுக்குப் பிறக்கவில்லை. அம் மனைவிகளை யாகபுரோகிதர்களுக்குத் தானமாகக் கொடுத்து அவர்களுடன் கலவி செய்து கர்ப்பமுண்டாக்கப்பட்டனர். இது வால்மீகி ராமாயணத்தில் உள்ளது."

என்று ஈரோட்டு நாயக்கர் பேசியிருப்பது வெறும் பொய்ப் பிரசாரம். அவ்வாறு வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படவே இல்லை. இது ராமனையும் பிராம்மணர்களையும் இழிவுபடுத்த ஈ. வெ. ரா. போன்றவர்களால் அறியாமையாலும், அயோக்கியத்தனத்தாலும் செய்யப்படும் சொந்த விஷம கற்பனை. கௌஸல்யை, யாக குதிரையை வெட்டிவிட்டு அத்துடன் ஒரு இரவு தங்கிளுள். ரித்விக்குகள் (யாகத்தை நடத்திவைக்கும் ப்ராம்மணர்கள்) அதற்கு உதவி செய்தனர் என்று மட்டுமே வால்மீகி கூறியிருக்கிருர். மற்ற பத்னிகள் அங்குக் குதிரையுடன் தங்கியிருந்ததாக அவர் சொல்லவில்லை. அந்நியர்களுடைய மனைவியைச் சேருவது தவறு, பாவச்செயலுமாகும் என்பது வைதிக தர்மத்தின் கொள்கை. வால்மீகியும் இதை அழுத்தமாகப் பலவிடங்களில் வற்புறுத்தியிருக்கிருர். இந்த நிலைமையில் ரித்விக்குகள் அப்படிப்பட்ட அதர்ம காரியத்தைச் செய்ய அவ்வைதிக கர்மத்தில் சந்தர்ப்பம் ஏற்படுத்தப்பட்டிருக்குமா என்பதைச் சிறிதுகூடச் சிந்திக்கப் பொறுப்பில்லாத இவர்கள், மற்ற பத்னிகள் ரித்விக்குகளுடன் சேராமல் எப்படி கர்ப்பம் தரித்தனர் என்பதை விளக்க வேண்டாமா ?

ரித்விக்குகளுக்குப் பத்னிகளை தானம் செய்துவிட்டுப் பிறகு திரவ்யங்களைக் கொடுத்து அவர்களை

மீட்டுக் கொள்ளுவது என்ற விஷபமும் வால்மீகியால் சொல்லப்படவில்லை. யாகக் கடைசியில் ரித்விக்கு களுக்கு பூதானம் செய்யப்படும் விஷயம் மட்டுமே வால்மீகி ராமாயணத்தில் காணப்படுகிறது. கடைசி யாகச் செய்யப்படவேண்டிய அந்தப் பூதானம் இருக்கும்பொழுது யாக மத்தியில் மற்றோர் தானத் திற்கு சந்தர்ப்பம் கிடையாதென்றும், அவ்வாறு விதிக்கப்படவுமில்லை யென்றும் சில வியாக்யான கர்த்தாக்கள் தெளிவாக விவரித்திருக்கின்றனர். ஒரு மன்னனுக்கு ஒரு பத்னி மட்டுமே இருந்தால் எல்லா ரித்விககுகளுக்கும் ஒருத்தியே தானம் செய்யப் பட வேண்டியவள் என்று சொல்லுவதும் அர்த்த மில்லாததாகும்.

இதைக் கவனிக்கும் பொழுது பத்னி தானம் என்பது விதிக்கப்படவில்லை என்று சில வியாக் யானக்காரர்கள் அறிவித்திருப்பது நியாயமெனவே நினைக்க இடமிருக்கிறது.

இவ்விஷயம் வால்மீகி மஹாமுனிவராலேயும் சொல்லப்படாமலு மிருக்கிற விஷபம் இக் கொள் கையை உறுதிப்படுத்தக் கூடியதாயிருக்கிறது. மஹாபாரதத்தில் காணப்படும் அசுவமேத பர்வாவில் யாஜகர்கள் திரௌபதியைக் குதிரையின் சமீபத்தில் உட்கார வைத்தனர் என்றே கூறப்பட்டிருக்கிறது. அவ்வாறே இங்கும் பொருள் கொள்ளுவதுதான் பொருத்தமுள்ளதாக ஆகும்.

ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தில் காணப்படும் 'ஸமயோஜயந்' என்ற பதத்திற்கும், ஸ்ரீ மஹா பாரதத்தில் காணப்படும் 'ஸமவேசயந்' என்ற பதத்திற்கும், (ருத்விக்குகள் செய்ய வேண்டிய காரியத்தைக் கவனிக்கையில்) கருத்திலும் காரியத் திலும் மாறுபாடு இல்லாததாகவே இருக்கிறது. பம்பாயில் குஜராத்தி அச்சுக்கூடத்தில் பிரசுரிக்கப் பட்டிருக்கும் வால்மீகி ராமாயணத்தில் 'ஹயேந' 'ஸமயோஜயந்' என்றே இருக்கிறது. 'ஹஸ்தேந'

என்று வேறு பாடம் இருக்கிறதாகக் குறிப்பிடப் பட்டிருக்கிறது. சென்னைப் பதிப்புகளில் ஹஸ்தேந ஸமயோஜயந் என்று போடப்பட்டு ஹயேந என்று வேறு பாடமிருக்கிறதாகக் குறிப்பிடப்பட்டி ருக்கிறது. இரண்டு பாடங்களானாலும் நடைபெற வேண்டிய காரியம் ஒன்றேதான். குதிரையின் சமீபத்தில் யாஜகர்கள் ராஜ பத்னியை உட்கார வைப்பதுதான். ஆகையால் இவ்வெல்லாவற்றையும் ஆராயும் பொழுது பத்னிதானத்திற்கு இங்குச் சந்தர்ப்பமே கிடையாது என்பதை உறுதியாகக் கொள்ளலாம்.

அப்படி பூதானம் போல் பத்னிகளும் தானம் செய்யப் படுவதாக வைத்துக்கொண்டாலும் அவை கள் உபசாரமாகக் கொடுக்கப்படுவதும் பிரதிநிதி யாகத் திரவ்யங்களைக் கொடுத்து விட்டு அவர்களையோ அவைகளையோ திரும்பப் பெறுவதும், பூதானம் போல் அங்கு யாகசாலையில் யாக மத்தியிலோ முடி விலோ,உடனேயே செய்யப்படவேண்டிய காரியமாக ஆகுமேயொழிய, தானம் செய்து விட்டுப் பிறகு சில காலம் கழித்துத் திரும்ப அவர்களையோ அவை களையோ பெறுவதென்பதும் இருக்க நியாயமில்லை. ஆகையால் கழகப் பொய்ப் பிரசார கோஷ்டிகள் கூறுவதுபோல் ருத்விக்குகள் ராஜ பத்னிகளைக் கலக்க எவ்விதத்திலும் சந்தர்ப்பமே கிடையாது என் பதைப் பொது மக்கள் நன்கு உணர்வார்களாக.

**பரதனுக்கு விரோதமாக ராமன் சதி செய்யவில்லை**

பரதனுக்கு எதிராகத் தன் தகப்பனுடன்சேர்ந்து சதி செய்ததாக ராமன்மீது அவ்வம்பர்களின் மற் றோர் குற்றச் சாட்டு. ராமனுடைய பொதுவான கொள்கையை நன்றாகக் கவனித்தவர்களுக்கு இது ஆதாரமற்றது என்பது புலனாகும். எச்சமயத்திலும் ராமன் தகப்பனார் சொன்னதை மறுத்துப் பேசி யதே கிடையாது. அவர் சாதாரணமாகச் சொன்ன

லும் அதைப் பெரும் சாஸனமாக மதித்து அவன் நடந்து வந்திருக்கிறான். விசுவாமித்ரருடன் செல்லுமாறு தசரதன் கட்டளை யிட்டதும் ராமன் எவ்வித வார்த்தையையும் பேசாமல் உடனே அவர் பின் சென்று விட்டான். தாடகையைக் கொல்லுமாறு விசுவாமித்ரர் தூண்டுகையில் 'தேவரீர் சொற்படி நடக்குமாறு என் பிதாவின் கட்டளை. அப்படியே செய்கிறேன்' என்று ராமன் தாடகை வதத்தில் இறங்கினான். ஜனகருடைய தனுர் யாகத்திற்கு ராமன் விசுவாமித்ரருடன் சென்றான். வில்லைப பார்க்கும்படி விசுவாமித்ரர் கட்டளையிட்ட பிறகே ராமன் வில்லை அணுகி அதைப்.பார்த்தான். விசுவாமித்ரர் வில்லை நாணேற்றச் சொல்லவில்லை என்று நினைத்து வில்லைப்பார்த்துக் கொண்டே அவன் நின்று கொண்டிருந்தான். விசுவாமித்ரர் தன்னைப் பார்த்ததும் இந்த வில்லை நாணேற்றலாமா என்று கேட்டான். 'அப்படியே செய்' என்று விசுவாமித்ரர் கூறிய பின்னரே ராமன் அந்த வில்லைத் தொட்டு நாணேற்றினான்.

அந்த வில்லை நாணேற்றியவனுக்குத் தமது புதல்வி ஸீதாதேவியைக் கல்யாணம் செய்விப்பதாக ஜனக மஹாராஜனுடைய பிரதிஜ்ஞை (சபதம்). வில்லை ராமன் நாணேற்றி முறித்ததும் தம் பெண்ணைக் கன்னிகா தானம் செய்யக் கிண்டியில் ஜலத்தை எடுத்துக்கொண்டு தாரைவார்க்க ஜனகர் ராமனை அணுகினார். ஆனால், ராமன் அதை ஏற்கவில்லை. 'விசுவாமித்திரர் வில்லை நாணேற்றச் சொன்னார். அப்படியே நான் அதைச் செய்து என் வீரத்தைக் காண்பித்தேன். விவாக விஷயம் என் தகப்பனாரின் கட்டளையைப் பொறுத்தது' என்று ராமன் பதில் சொல்லி ஒதுங்கிவிட்டான். ஸீதையிடம் பிறகு பேசும் சமயமொன்றில் அவளுடைய அழகுக்காக அவளைத் தான் மணக்கவில்லையென்றும், தசரதன் கட்டளை யென்பதற்காகவே அவளைக் கல்யாணம் செய்துகொண்டதாகவும் ராமன் வெகு அழுத்தமாகத்

தெரிவித்திருக்கிறான். இவைகளைக் கவனிப்பவர்களுக்குத் தசரதன் கட்டளையைப் பற்றி ஒருபொழுதும் ராமன் நியாயாநியாய விமர்சம் செய்வதில்லையென்றும், அவன் சொல்லுவதை அப்படியே ஏற்று நடக்கவேண்டியதே தன் கடமையென்று ராமன் நடந்துவருபவன் என்றும் நன்ருக விளங்கும். பட்டாபிஷேகம் செய்துகொள்ளுமாறு தசரதன் ஆஜ்ஞாபித்தான். அப்படியே செய்கிறேன் என்று ராமன் ஒப்புக்கொண்டான். பிறகு காட்டுக்குப் போகவேண்டும் என்று பிதாவின் கட்டளையென்று கைகேயி சொன்னுள். பிதா நேரக்கூடச் சொல்லவில்லை. அதையும் அப்படியே அவன் சிறிதும் தயங்காமல் ஏற்றுக்கொண்டான். ஆகையால் ராமனுக்கு ராஜ்ய ஆசையென்றும், அதனுல் பரதனுக்கு எதிராகத் தசரதன் சதிசெய்ததை ராமன் ஒப்புக்கொண்டான் என்றும் சொல்லுவதெல்லாம் ஆதரிக்கத்தகாத விஷயமாகும்.

அவ்வாறு காட்டுக்குப் போகவேண்டுமென்று பிதாவின் சாஸனமெனச் சொன்னதும், சாதாரணமாகத் தாமரைப் பூவையொத்த ராமன் திருமுக மண்டலம் உடனே மலர்ந்தது. மிகச் சந்தோஷத்தை அடைந்ததாகக் காணப்பட்டது. அவனுடைய முகம் அப்பொழுது மலர்ந்த செந்தாமரைப் புஷ்பத்தையொத்திருந்தது என்று கம்ப நாட்டாழ்வார் வர்ணித்திருக்கிருர்.

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் 'ஸுமுக' என்ற பதத்திற்கு ஆதி ஸ்ரீ சங்கராசாரியர், வனவாஸம் செய்யவேண்டுமென்று கைகேயி சொன்னவுடன் சிறிதும் விகாரமடையாத முகத்தையுடைய ராமசந்திரனை உதாரணமாகக் காண்பித்து விளக்கியிருக்கிருர். அப்படிப்பட்ட ராமன், ராஜ்யத்தில் ஆசையுள்ளவனுகவும், கைகேயியையும் பரதனையும் வெறுத்து மனக் கஷ்டமடைந்ததாகவும், பரதனுக்கு எதிராகத் தன் தகப்பனுடன் சதி செய்ததாகவும்

கூறுவது அறியாமையாலோ அல்லது விஷம புத்தியாலோ ஏற்பட்ட முடிவாக இருக்கவேண்டுமேயொழிய உண்மையை எடுத்துரைப்பதாக ஒருபொழுதும் ஆகாது.

### ராமன் ராஜ்ய ஆசையே இல்லாதவன்

தான் ராஜ்யத்தை விட்டுவந்த துயரத்தையும், கைகேயி, பரதன் முதலியோர் திருப்தியடைவார்கள் என்ற விஷயத்தையும் ராமன் தண்டகாரணியத்தில் குறிப்பிடும்பொழுது ராமன் வருத்தமடைந்து பேசுவதாகத் தோன்றக்கூடும். ஆனால் அவைகள் பேசப்படும் சந்தர்ப்பங்களை யெல்லாம் சேர்த்து கவனிப்பவர்களுக்கு லக்ஷ்மணனுடைய மனம் தளராமலிருக்கிறதா என்பதைப் பரிசோதித்து அவனை உறுதிப்படுத்தவே ராமன் அவ்வாறு பேசியிருக்கிறான், உண்மையில் ஏற்பட்ட தன் சொந்த மன வருத்தத்தால் அல்லவென்பது தெளிவாகும்.

உதாரணமாக ஒரு சந்தர்ப்பத்தை இங்குக் குறிப்பிடுகிறோம். அயோத்யாகாண்டம் ஸர்ககம் 53 ஆரம்பத்தில் கங்கையைக் கடந்தபின்னர் இவ்வண்ணம் பேசிய ராமன் முடிவில் (சுலோகம் 15-16) 'என்னை உத்தேசித்து ஸுமித்ரை ஏன் கஷ்டப்படவேண்டும்? நீ போய் ஸுமித்ரையையும் என் தாயாரான கௌஸல்யையையும் கவனித்துக்கொள். நான் மட்டும் ஸீதையுடன் தனியாகக் காட்டிற்குச் செல்லுகிறேன்' என்று லக்ஷ்மணனைப் பார்த்துச் சொன்னான். மேலும் நியாயமான பல வாதங்களைச் செய்து அவனை அயோத்தி செல்லும்படி தூண்டினான். அச்சமயம் கண்ணும் கண்ணீருமாக 'ஜலத்தை விட்டு வெளியே எடுக்கப்பட்ட மீனைப் போல், சிறிது நேரம் கூடத் தங்களை விட்டு நான் ஜீவித்திருக்கமுடியாது. உங்களை விட்டுவிட்டு, தகப்பனாரையோ, சத்ருக்னனையோ, ஸுமித்ரையையோ பார்க்க நான் விரும்பவில்லை. தங்களை விட்டு ஸ்வர்க்கத்தைப் பார்ப்பதென்றால்

கூட எனக்கு விருப்பமுள்ளதில்லை' என்று லக்ஷ்மணன் ராமனிடம் பதில் கூறினான். (அதே ஸர்க்கம் 53-சு. 31-32). பிறகு ராமன் லக்ஷ்மணனைத் தன்னுடன் அழைத்துச் செல்லுகிறான். இவ்வாறு சந்தர்ப்பத்தைத் தழுவி ராமனுடைய வார்த்தைகளின் கருத்தைக் கூறாமல் தனியே அவனுடைய வார்த்தைகளை மட்டும் குறிப்பிட்டு அவன்மீது குற்றத்தைச் சுமத்தப் பலர் முயலுகிறார்கள். அவ்விதம் கெட்ட எண்ணம் கொண்டவர்களுடைய வாதங்களைக் கேட்டுப் பொது மக்கள் ஏமாறாமலிருக்க வேண்டியது அவசியம்.

பதினான்கு வருஷங்கள் கடந்து ராவண வதத்திற்குப்பின் அயோத்தி திரும்பும்பொழுது தான் வருவதாகப் பரதனுக்கு ஹனுமான்மூலம் ராமன் சமாசாரம் அனுப்பினான். பரதன் முகக் குறியைக் கண்டு அவன் என்ன மனநிலைமையி லிருக்கிறான் என்பதை உணர்ந்துவருமாறும் ஆஞ்சநேயனுக்கு அறிவித்தான். நெடுங்காலம் அரசில் இருந்தமையால் பரதனுடைய மனம் மாறியிருக்கக்கூடும் என்பதையும் ராமன் அவரிடம் ஓர் சந்தேகத்தையும் கூடவே குறிப்பிட்டிருந்தான். ராஜ்ய ஆசையால் பரதன்மீதுள்ள சந்தேகத்தை ராமன் காண்பிப்பதாக இச்சந்தர்ப்பத்தைச் சில வம்பர்கள் பயன்படுத்தப் பார்க்கின்றனர். இது தவறு. ராமனுக்கு அயோத்தி திரும்ப விருப்பமில்லை. பரதனுடைய திருப்திக்காகவே ராமன் அயோத்தி திரும்ப விரும்பினான். ஒரு சமயம் அவனுக்கு, தான் திரும்புவதில் விருப்பமில்லாம லிருந்தால் அந்தச்சாக்கில் தான் ஊருக்குள் செல்லாமல் கானகமே திரும்பிவிடலாமென்ற பேரவாவினாலேயே ராமன் அவ்வாறு ஆஞ்சநேயனிடம் சொல்லி யனுப்பினான். ராஜ்யச் சுமையை ஏற்பது மிகவும் கஷ்டம் என்பது அவனுக்குத் தெரியும். ஆளத் தெரியாவிட்டாலும் ராஜ்ய ஆசையுள்ளவர்கள் கோஷ்டியில் ராமன் சேர்ந்தவனல்ல. ஆட்சி செலுத்துவதிலுள்ள கஷ்டங்களை

யும் புண்ணிய பாவங்களையும் அவன் நன்கு உணர்ந்தவன். இதனாலேயே ராமனுக்கு அரசனாக இருப்பதைவிடக் காட்டில் தவம்செய்யச் செல்லுவதே மேல் என்ற எண்ணம் நிரம்பி யிருந்தது.

நெடுங்காலம், தான் வெகு கஷ்டப்பட்டு சுமந்து வந்த அயோத்தியின் அரசை வஹிக்குமாறு தகப்பனார் தசரதன் சொன்னதும், தன் தகப்பனாருடைய கட்டளையென்பதற்காகவும், அவருடைய சிரமத்தைக் குறைக்கவேண்டியது தன் கடமை யென்பதற்காகவும் ராமன் அதை ஏற்றுக்கொண்டானே யொழிய ராஜ்ய ஆசையால் அல்ல வென்று கவியரசனாகிய கம்பனும், மஹா கவி காளிதாசனும் வால்மீகி மஹா முனிவருடைய ஆழ்ந்த கருத்தை வெகு அழகாக விளக்கி யிருக்கின்றனர்.

ராஜ்யபாரத்தை ஏற்கும்பொழுது வண்டி நுகத்தடியின் கீழ்த் தன்கழுத்தைக் கொடுக்கச் செல்லும் எருதுபோலிருந்தான் ராமன் என்றும், ராஜ்யத்தை விட்டுக் கானகம் செல்லவேண்டுமென்று சொன்ன பொழுது நுகத்தடியிலிருந்து கழற்றி விடப்பட்ட எருதை அவன் ஒத்திருந்தான் என்றும் கம்பர் கூறி யிருக்கிறார். ராஜ்யத்தை ஏற்கவேண்டுமென்ற சமயம் ராமனுடைய முகம் சாதாரண்மாகத் தாமரைப் பூவை ஒத்திருந்தது; அதைவிட்டு வெளிச்செல்ல வேண்டுமென்று கட்டளை யிடப்பட்ட அந்த க்ஷணமே அது புது மலர்ச்சியை அடைந்து அதிக அழகுடன் பிரகாசித்தது என்று இருசமயங்களிலுமுள்ள ராமசந்திரனுடைய திருமுக மண்டலத்தின் வித்தியாஸத்தை அவர் வெகு நன்றாகவும் அழகாகவும் விளக்கி யிருக்கிறார். ராஜ்ய பாரத்தை ஒப்புக்கொள்ளுமாறு இடப்பட்ட பிதாவின், முன் கட்டளையை ராமன் மன வருத்தத்துடனேயே ஏற்றான். அதைவிட்டுக் கானகம் செல்லவேண்டுமென்ற பின் உத்தரவைப் பெரு மகிழ்ச்சியுடன் ராமன் ஒப்புக்கொண்டான் என்று காளிதாஸ மஹாகவி அறிவித்திருக்கிறார்.

இவ்வாறு முன்பின் விஷயங்களையெல்லாம்நிதானமாக நேர்மையுடன் புத்தியைப் பயன்படுத்துகிறவர்களுக்கு ராமனுடைய உயர்ந்த குணங்கள் புலனுகும். சரியான வால்மீகியின் கருத்தும் விளங்கும். தளர்ந்த சரீரத்திற்கு ஓர் குமரியை மணமகளாக்குவது தகுமா என்ற மிகச் சாதாரணபுத்தியைக்கூடப் படைத்திராதவருக்கும் உண்மைப் பகுத்தறிவைப் பயன்படுத்த நேர்மையானமனத்தைப் படைத்திராத செம்மறியாடுகளையொத்த அவருடைய பரிவாரங்களுக்கும் எப்படிச் சொற்களின் கருத்து விளங்கப் போகிறது?

## ராமன் மாமிசம் சாப்பிடவில்லை

ராமன் மாமிசம் சாப்பிட்டதாக அவன்மீது தமிழ் நாட்டில் வீண் கிளர்ச்சி செய்துவரும் மனிதப் பதர்களின், மற்ருேர் புகார். ராமன் மாமிசம் சாப்பிட்டாஞ இல்லையா என்ற விஷயம் ஒருபுறமிருக்கட்டும். மாமிசம் சாப்பிட்டான் என்பதற்காக அவனை அயோக்கியன் என்று கூறிவிட முடியுமா? மாமிசம் சாப்பிடாதவர் எல்லோரும் யோக்கியர்கள் என்ற கருத்தா? ராமன் ஆர்யன். அவன் மாமிசம் சாப்பிட்டான். திராவிடர்கள் என்ருே, தமிழர்கள் என்ருே அழைக்கப்படுபவர்கள் திருவள்ளுவரின் திருக்குறளைப் பின்பற்றியவர்கள்: அவர்களனைவரும் புலாலை மறுத்தவர்கள் என்று அர்த்தமா? இவர்களுடைய் வாதத்திலிருந்து திராவிடக் கழகத்தினர் அனைவரும் மாமிசம் சாப்பிடாதவர்கள் என்று நிச்சயித்துவிட முடியுமா? இதனுல் தமிழர்கள் நாட்டில் கசாப்புக் கடைகளே இல்லை என்று கருத்தா? அல்லது கசாப்புக் கடைகள் இருக்கிற இடங்களெல்லாம் அயோக்கியர்கள் வசிக்குமிடமென்று தீர்ப்புக் கூறுவதா? மாமிசம் சாப்பிடுகிறவர்கள் திருக்குறளைப் படிக்காதவர்களென்ருே, படிக்கக் கூடாதவர்களென்ருே இவர்கள் சாதனையா? ராமன்

மாமிசம் சாப்பிட்டானு இல்லையா என்ற விஷயத்தை விவாதித்து இவர்கள் என்ன முடிவைச் செய்ய முற்பட்டிருக்கின்றனர் என்பது நமக்கு விளங்க வில்லை. மாமிசம் சாப்பிடுவது அயோக்கியத்தனம் என்று இவர்கள் சாதிக்க முற்படுவார்களாயின் தமிழர்களனைவரையும் மட்டுமல்ல, அன்னிய தேசத் தினர்கள், கிறிஸ்துவ, முகம்மதிய மதத்தினர்கள், பௌத்தர்கள் முதலியோர் அனைவரையுமே அயோக்கியர்கள் என்று இவர்கள் துணிந்து கூறு வதாக ஆகும்.

கடவுள் அவதாரம் என்று கூறப்படுகிறவர் மாமிசம் சாப்பிடலாமா என்று வினவுவார்களாயின் கடவுள், அவதாரம் செய்திருக்கும் இனத்தைப் பொறுத்து, அவர் தமது பழக்க வழக்கங்களைப் பின் பற்றுவது நியாயமேயாகும் என்று தான் நாம் கூறு வோம். போலிப் பகுத்தறிவு இல்லாமல் உண்மைப் பகுத்தறிவையும் யோக்கியப் பொறுப்பையுமுடைய வர்களும் இதை ஏற்பர். கடவுள் புலியாக அவதாரம் செய்திருந்தால் அவர் புல்லைத்தான் தின்னவேண்டும் என்று சொல்லுபவர் அறிவுடையவர் ஆகமாட்டார். தன்னுடைய இயற்கைச் சட்டத்தைத் தானும் பின் பற்றுவதுதான் கடவுளின் தன்மைக்கு உகக் கும். அப்படியே ராமன், க்ஷத்திரிய குலத்தில் பிறந்திருப்பதற்காக, அக்குலாசாரத்தைப் பின் பற்றுவது தவருக ஆக மாட்டாது. சரீரபலத்தை வளர்த்து உலகைப் பாதுகாக்க வேண்டிய இயற் கையை உடைய க்ஷத்ரீயர்கள் மாமிசம் சாப்பிட உரிமையுள்ளவர்களே ஆவார்கள்.

ஆனல் ராமன் தண்டகாரணியம் சென்றிருக்கும் பொழுது மாமிசம் சாப்பிடவே இல்லையென்பது அவன் வாயிலாகவே வெளிவந்துள்ளது. இதை வால்மீகி தவருமல் குறிப்பிட்டிருக்கிருர். குகன் செய்த உபசாரத்தை மறுக்கும் பொழுது, தான் காடுகளிலுள்ள பழம், கிழங்கு வகைகளையே உட்

கொள்ளும் நியமத்திலிருந்து வருவதாக ராமன் கூறி யிருக்கிறான். ஆங்காங்கு பல ஆசிரமங்களுக்குச் சென்றிருக்கும் சமயம் மஹரிஷிகளால் செய்யப்பட்ட அதிதி பூஜைகளில் ராமன் கந்த, மூல, பலங்களையே பெற்று உட்கொண்டதாகவும் தெளிவாக விவரிக்கப் பட்டிருக்கிறது. ராமன் போதை தரும் வேறு வஸ்துக்களை உபயோகித்ததாகவும் எங்கும் காணப் படவில்லை. ஆகையால் ராமன், மது மாமிசம் சாப் பிட்டதாகவும், அது பெரும் குற்றம் என்றும் ஈ. வே. ரா. - ராதா கோஷ்டியினர் அடிக்கும் வம்பு அர்த்தமில்லாதது, ஆதாரமில்லாதது. மது என்றால் தேனைக் குறிக்கும் பதமாகவும் ஆகக்கூடும். அதைக் கூட ராமன் உபயோகப்படுத்தவில்லை. உண்மை யற்ற விஷயங்களைப் பேசுவதும் அதனால் ராம னுடைய கௌரவம் குறைந்து விட்டதாக நினைப் பதும் கூறுவதும் வடிகட்டிய முட்டாள்தனம் மட்டு மல்ல, பெருத்த அயோக்கியத்தனமாகவும் ஆகும். பொதுமக்கள் இவர்களுடைய பொய்யான விபரீத வாதங்களைக் கேட்டு ஏமாந்து தவறான மனப் பான்மைகளை வளர்க்காமலிருக்க வேண்டியது அவர் களுடைய நன்மைக்குரிய காரியமாகும்.

## ராமன் கோழையல்ல

ஸீதையை ராவணன் பலாத்காரமாக எடுத்துச் சென்றபின் ராமன் கோழையாக எப்பொழுதும் அழுது கொண்டே இருந்தான். தன் ஸீதையைத் தேடிக் கொடுத்து உதவும்படி எவரைக் கண்டாலும் கெஞ்சிக் கொண்டே இருந்தான். இதனாலேயே ராமன் வீர னில்லை, வெறும் கோழை என்று ஈ. வே. ரா.—ராதா கோஷ்டியினர் பேசுகின்றனர்; தங்களுடைய நாடகத் தில் அத்தகைய காட்சிகளையும் புகுத்தியிருக்கின் றனர்.

இது ஒரு முட்டாள்தனமான வேலை. அதில் போக்கிரித்தனமும் நிரம்பியுள்ளது. ஸீதையைவிட்டு வெளியே எங்கும் செல்ல வேண்டாம் என்று வற்

புறுத்தியிருந்தும் லக்ஷ்மணன் அவளைத் தனியே விட்டுவிட்டு வெளிச்சென்றான். இச்சமயம் திருட்டுத் தனமாகவும் பேடித்தனமாகவும் ராவணன் ஸீதையை அபஹரித்துப் போகும்படி ஏற்பட்டு விட்டது, தன் தகப்பனுடைய தோழனும், பெரும் பக்தனுமுள்ள ஜடாயுஸ்ஸு உயிர் துறக்கவும் நேர்ந்தது என்ற இருவகைத் துக்கத்தினாலும் ராமன் மன வருத்த மடைந்தான். தன்னுடைய அன்பர்கள் துக்கமடை வதைக் கண்டு எவர்தான் கலங்காமலிருப்பர்? அவர் களுடைய துக்கங்களைப் போக்கத் தனக்குச் சந்தர்ப் பமும் வாய்க்காமல் போய் விட்டதே என்று ராமனுக்கு இரட்டிப்பான மன வருத்தம் தான். தன்னை அண்டினவர்களுக்குத் துயரம் ஏற்பட்டால் அதைக் குறித்துக் கருணையால் மன வருத்தமடை வதும், அவர்களை அதிலிருந்து மீட்க முயற்சிப்பதும் உத்தம புருஷ லக்ஷணமேயாகும். கடவுளுடைய தன் மையும் இதையனுஸரித்ததுதான். எவ்வளவோ வகைகளில் தன்னை அடைய வசதிகளை வைத்திருந்தும் அவைகளைப் பயன்படுத்தித் தன்னிடம் சேர முயற்சிக் காமல் ஸம்ஸாரத் துக்கச்சக்கரங்களில் ஜீவர்கள் கிடந்து உழல்கின்றனரே என்று கடவுளும் துக்கப் படுவதாகக் கூறப்படுகிறது. அத்துக்கம்மனத்தின்பல ஹீனத்தால் வந்ததல்ல. அது கருணை மிகுதியால் ஏற் பட்ட அனுதாபத்தின் விளைவு. தங்களுடைய கடமை களைச் செய்ய நழுவியதற்காகக் கடவுள் ஏங்கி உலகை உதாஸீனம் செய்து உட்கார்ந்து விடுவதில்லை. வேறு எவ்வகையிலாவது அதை உய்யச் செய்ய வேண்டு மென்றுபலவித உபாயங்களைச்செய்து வருபவராகவே அவர் இருந்து வருகிறார். அதைப்போல் ராமனும் ஸீதையைக் காணாதபோது சற்றுக் கவலைப்பட்டான். அவளைக் காக்கும் தன் கடமையிலிருந்து நழுவி விடும் படியான சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டதைக் குறித்து மன வருத்தத்தையும் அடைந்தான். ஆனால் அதோடு தன் வேலை முடிந்து விட்டதாகவும் இனி அவளைத் தேடித் திரும்பப்பெற முயற்சிக்காமல் வீடு திரும்பி

விட வேண்டுமென்றே; காட்டிலேயே அழுது கொண்டு பொழுது போக்கி வரவேண்டியது தான். என்றே, ராமன் ஏங்கி ஒதுங்கிவிட வில்லை. எப்படியாவது அவளை ராவணனிடமிருந்து மீட்டே தீரவேண்டுமென்று உறுதியுடன் மேல் முயற்சிகளைச் செய்யத் துவங்கிவிட்டான். காட்டி லேயே தங்கி அழுதவண்ணமாய் அங்கு வந்தவர் களைக் கெஞ்சிக்கொண்டு ராமன் பொழுதுபோக்கி வரவில்லை. அந்தத் துக்கத்தின் காரணமாக ராமன் மனம் ஒடிந்துவிடவில்லை. அவனுடைய பலம் குன்றி விடவுமில்லை. அதன் பிறகே கபந்த வதம் நடை பெற்றிருக்கிறது. ஸப்தசால விருக்ஷத்தைத் தன் அம்பால் ராமன் துளைத்திருக்கிறான். கால் கட்டை விரலினால் வலுவான துந்துபியின் எலும்புக்கூட் டைச் சுண்டி வெகுதூரம் போய்விழும்படி செய்திருக் கிறான். தன் வலுவால் வாலியால்கூடப் பிடுங்கி எறிய முடியாத ஒரே அம்பை அவனுடைய மார்பில் பாய்ச்சி அவனை உயிர் துறக்கச் செய்திருக்கிறான். ராவண வதமும் நடைபெற்றிருக்கிறது. இவைகளெல்லாம் எதை நிரூபிக்கின்றன என்பதை இந்த அயோக்கிய 'கீமாயண' கோஷ்டி சிந்தித்துப் பார்க்கட்டும். தன்னால் காப்பாற்றப்பட வேண்டியவர்களைக் காப்பாற்ற முடியாமல் சந்தர்ப்பம் நழுவியதைக் குறித்து எவர்தான் துக்கப்படாமலிருப்பர்? இந்தக் 'கீமாயண'க் கும்பல்களின் மனைவிகளை எவரா வது இழுத்துக்கொண்டு போய்விட்டால் இவர்கள் சிறிதுகூட துக்கப்படாமல் வெறுப்பான வார்த்தை கள் எவைகளையும் சொல்லாமல் பேரானந்தப்பட்டுக் கொண்டு களிப்புடன் வீற்றிருப்பர் போலும்! ஒரு கால் அவ்வண்ணம் இவர்கள் இருந்தாலும் இருப்பர். ஏனென்றால், வாழ்க்கை நடத்தவல்லாமல் வாரிசுக் காகக் கல்யாணம் செய்துகொள்ளும் 'மாபெரும்' தலைவரும் அவருடைய பரமானந்த சிஷ்யர்களும் எதைத்தான் செய்யமாட்டார்கள் என்று எப்படிச் சொல்லுவது?

ஸுக்ரீவ சகாயத்தை ராமன் தேடியதும் கூட அவனைப் பெருமைப் படுத்தவென்றே தோன்று கிறது. ராமனுடைய பராக்ரமத்தைக் கண்ட ஸுக்ரீவன் இதை ஒப்புக்கொண்டிருக்கிறான். ஸீதையைத் தேடும் முயற்சியை ஆரம்பிக்காமல் ஸுக்ரீவன் சற்று உதாஸீனமாயிருப்பவன் போல் காணப்பட்ட தருணம், அவனை எச்சரித்துவருமாறு லக்ஷ்மணனை ராமன் அனுப்பினான். 'வாலி போன வழி இன்னும் மூடப்படவில்லை. திறந்தேதான் வைக்கப்பட்டிருக்கிறது. சமயோசிதமான காரியங்களைச் செய்ய முற்படு. வாலியைப் பின்பற்றிப் போக வழி தேடாதே' என்று பச்சையாகவே ஸுக்ரீவனிடம் அறிவித்து விடும்படியும், லக்ஷ்மணனிடம், ராமன் செய்தி சொல்லி அனுப்பினான். லக்ஷ்மணனுடைய கோபக் குறிகளைக் கண்டு பயந்த ஸுக்ரீவன் அவனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறான். 'ராமன் தன் காரியத்தைச் சாதித்துக்கொள்ளும் வல்லமையுள்ளவன். அவனுடைய கட்டளைக்கு கீழ்ப் படிவதற்காகவும், எனது கடமைகளைச் செய்து அவனுடைய அபிமானத்திற்கு ஆளாகிப் பெருமையை அடைவதற்காகவுமே (தெய்வங்களின் பின் செல்லவேண்டிய மரியாதைபோல்) ராமனுடன், வெறும் 'அனுயாத்ரை'யை(பின் செல்லுவதை) நான் செய்கிறேன்' என்று லக்ஷ்மணனிடம் ஸுக்ரீவன் பிறகு தெரிவித்துக் கொள்ளுகிறான். இவைகளெல்லாம் கவனிக்கத் தகுந்த பகுத்தறிவையுடையவர்கள ராமன் துக்கத்தால் ஒடிந்து அழுதவண்ணமாகவே இருந்து தன் பத்னியை மீட்டுத் தருமாறு கெஞ்சிக் கொண்டு பிறர் உதவியால் தன் பத்னியைப் பெற வேண்டிய வீரமற்ற நிலைமையில் இருந்தான் என்று சொல்லவும், அவ்வாறு நாடகங்களில் காட்சிகளை அமைக்கவும் நடித்துக் காண்பிக்கவும் துணியமாட்டார்கள்.

## வாலி வதம்

ஸ்ரீராமன் வாலியைக் கொன்றதே அநியாயம்; அதிலும் மறைந்திருந்து அடித்தது மிகவும் மோசமானது, பெரும் அதர்மம்............

என்று மற்றோர் குற்றச் சாட்டு. இதில் இந்த வம்புக் கழகத்தினர் மட்டுமல்ல, மிகவும் நன்றாகப் படித்தவர்கள், உலக அனுபவம் நிறைந்தவர்கள், புத்தி நுட்பமுள்ளவர்கள் எனப் புகழ்பெற்றவர்களும்கூட இதன் நியாயாநியாயத்தைப் புரிந்துகொள்ள முடியாமல் பெரும் கலக்கமடைந்திருக்கின்றனர். ராமன் பகவதவதாரம் என்பதற்காக நியாயமென மேலாகச் சொல்லிக்கொண்டு சிலர் உள்ளூர மனச் சங்கடத்துடனிருந்து வருகின்றனர். இந்த வாலியை மட்டும் ராமன் மறைந்து அடிக்காமலிருந்திருந்தால் எவ்விதக் குற்றத்திற்கும் அவன் ஆளாகாமலிருந்திருப்பான் என்ற எண்ணமும் சிலர் மனதில் ஊடாடிக் கொண்டுதானிருந்து வருகிறது.

ஆனால், வைதிக மதத்திலும் அதை விவரிக்கும் தர்ம சாஸ்திரங்களிடத்திலும் ஊன்றிய நம்பிக்கையையும், ஆசார்ய கடாக்ஷத்தினாலும் பகவதனுக்ரஹத்தினாலும் உண்டாகக்கூடிய புத்தித் தெளிவையும், நேர்மையாக நியாய விசாரம் செய்யும் பழக்கத்தையும் கொண்டிருப்பவர்களுக்கு இவ்விஷயத்தில் எவ்விதச் சந்தேகமும் ஏற்பட இடமில்லை. ராமனிடம் சலுகையால், அவனிடம் அன்பு இருப்பதற்காக, அவன் செய்தது நியாயம்தான் என்று ஒப்புக்கொள்ளாமல், உண்மையில், சாஸ்திர ரீதியில், அவன் வாலி வதம் செய்ததும், மறைந்து அடித்ததும், குற்றமற்ற விஷயமென்றே அவர்களுக்கு நன்கு தெரியவரும்.

ஒருவனுடைய குற்றமற்ற தன்மை பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்படவேண்டிய விஷயம் முதன்மையானது. அப்படிப்பட்ட நிலைமையில் வாலி இல்லை. தூயமான தெய்வ சரீரத்தை யடைந்த கபந்தன், சபரி முதலியோர் வாலியுடன் சிநேகம் செய்து

கொண்டு அவனுக்கு அனுக்ரஹம் செய்யுமாறு வற்புறுத்தவில்லை. அவனுடைய தம்பி சுக்ரீவனுடனேயே சிநேகம் செய்துகொண்டு அவனுக்கு அருள் செய்யவேண்டுமென்று முக்கியமாக, அழுத்தமாய் அவர்கள் சிபாரிசு செய்திருக்கின்றனர். ஆஞ்சநேயன் போன்ற சுத்த ப்ரம்மசர்யமும், நவவ்யாகரண பாண்டித்யமும், வேத வேதாந்தங்களின் சிக்ஷையும், தெளிவான தர்மாதர்ம விவேகமும் நிரம்பியவர்கள் வாலியைத் தியாகம் செய்து ஸுக்ரீவனுடனேயே சேர்ந்திருக்கின்றனர். 'ஸாது பரிக்ரஹம்' (நல்லோர்களால் ஒப்புக்கொள்ளப்படும் தன்மை) இல்லாததோடு வாலிக்கு பெரியோர்களுடைய வெறுப்பும் சாபமும் இருந்திருக்கிறது. ம்தங்க மஹரிஷியினிடமும் வாலி அபசாரப்பட்டிருக்கிறான். அவருடைய ஆசிரமத்திற்குள் பிரவேசிக்கக்கூடாது, அப்படித் தவறியோ பலாத்காரமாகவோ நுழைந்தால் அவன் தலை சுக்குத் தூளாக வெடித்துச் சிதறிவிடும் என்று அவனுக்கு அவருடைய சாபம் ஏற்பட்டிருக்கிறது. பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்படா திருப்பதோடு அவன் அவர்களால் வெறுக்கப்பட்டிருப்பதையும் இது குறிக்கும். மேலும் அதோடு அஸத்ஸங்யமும் அவனிடமிருந்தது. எந்த ராவணனுடைய தொந்திரவு பொறுக்க முடியாமல் ப்ரஹ்மாதி தேவர்கள், வால்மீகி, அத்ரி, சரபங்கர், அகஸ்த்யர், மதங்கர், சபரி போன்ற தண்டகாரண்ய வாசிகளான மஹா தபஸ்விகள் அவனுடைய வதத்தை விரும்பி ராமாவதாரத்தை வேண்டினர்களோ அந்த ராவணனுடன், ஆபத்துக் காலங்களில் பரஸ்பரம் உதவிக் கொள்ளுவதாக, அக்னிசாக்ஷியாக ஒப்பந்தத்தையும் வாலி செய்துகொண்டிருக்கிறான். இச்சமயம் ராவணனுடைய பாவ கார்யங்கள் வாலிக்குத் தெரியாது என்று சொல்லுவதற்கில்லை. இதனால் ராவணன் நல்லோருக்குச் செய்துவந்த ஹிம்சைகள் வாலி சம்மதத்தைப் பெற்றிருந்ததென்று தானே நினைக்கவேண்டியிருக்கிறது. அவைகளை அவன் ஒப்புக்கொள்ளா

விட்டாலும் ராமனுடன் வெகு நுட்பமாக தர்மவாதம் செய்யும் அவன் சிநேகிதனுன ராவணனுடைய அதர்ம காரியங்களைத் தடுத்திருக்க வேண்டாமா?

மேலும், தன் தம்பியை அடித்துத் துரத்திவிட்டு அவன் உயிருடனிருக்கும் பொழுது அவனுடைய மனைவியுடன் வாலி கூடி இருந்து வந்தான். அவளுடன் வாலி எவ்விதம் நடந்து வந்தான் என்ற விஷயம் ஒருபுறமிருக்க, தன் புருஷனைவிட்டு அவளைப் பிரித்துத் தன்னிடம் வாலி வைத்திருக்கும் குற்றம் ஒன்றே போதுமான மிகத் தவருன காரியமாகும். தன் தம்பி, புத்ரனுக்கு ஒப்பாவான் என்றும், அவன் மனைவி தனக்கு மருமகள் ஆவாள் என்றும், தர்ம சாஸ்திரங்களின் கொள்கை.

அப்படிப்பட்டவர்களுடைய புருஷன்மார்கள் உயிருடனிருக்கும் பொழுது, பலாத்காரமாக அவர்களைப் பிரித்து வைப்பது, புணருவது என்பது மிகக் குற்றமென்றும், அதற்குத் தண்டனை கொல்லப்பட வேண்டிய மரண தண்டனையே என்றும் மனுநீதியின் முறை. சந்தேகமற இந்த மரண தண்டனைக்குரிய குற்றத்தை வாலி செய்திருக்கிருன். இதை வாலியிடம் ராமனும் எடுத்துக் கூறியிருக்கிருன்.

இரண்டாவது தடவை ஸுக்ரீவன் வாலியை யுத்தத்திற்கு அழைத்த தருணம் தாரை வாலியைத் தடுத்தாள். 'அயோத்யாதிபதியின் புதல்வர்களான இருவீரர்கள் ஸுக்ரீவனிடம் வந்திருக்கிறதாக அங்கதன் சொன்னுன் என்றும், அவர்கள் எவராலும் ஜெயிக்கமுடியாத அவ்வளவு உயர்ந்த பலமுடையவர்கள் என்றும், அவள் அவனிடம் அறிவித்திருக்கிருள். அவன் மிகவும் ஞானவான், தர்மத்தைக் கடைப்பிடித்தவன், சரணுகதரக்ஷகன் என்றும் தெரிவித்திருக்கிருள். ஆர்த்தர்களை (கவலையடைந்து சரணுகதி செய்கிறவர்களை) அவன் காப்பாற்றுகிறவனுனபடியால் ஸுக்ரீவனுக்கு உதவியாக அவன் வரக்கூடுமென்றும், அவனுடைய வலுவினுலேயே

ஸுக்ரீவன் மறுபடி யுத்தத்திற்கு அழைக்கிருனென்றும், ஆகையால் அவனேடு விரோதம் வைத்துக் கொள்ளுவது உசிதமல்லவென்றும் அவள் அழுத்தமாக வாலியை எச்சரித்துமிருக்கிருள். அந்நிலைமையில், ஸுக்ரீவனுக்கு யுவராஜ்யப் பட்டாபிஷேகம் செய்துவைத்துத் தம்பியுடன் ஒற்றுமையாயிருக்க நினைப்பதே நலமென்றும், ஸுக்ரீவன் எவ்விதத்திலும் அவனுக்குத் தம்பி தானே என்றும் சமயோசிதமான அரிய பல ஆலோசனைகளையும் தாரை தன் பர்த்தாவான வாலிக்கு அன்புடனும் கவலையுடனும் அச்சமயம் அவள் அழுத்தமாகக் கூறியிருக்கிருள். ராமன் ஸுக்ரீவனுக்கு உதவியாக வரமாட்டான் என்று தாரைக்கு அவன் அப்பொழுது சமாதானம் சொன்னுன். ராமன் தர்மம் தெரிந்தவன், செய்நன்றி மறக்காதவன் என்பதையும் வாலி அச்சமயம் அவளிடம் கூறியிருக்கிருன். அப்படிப்பட்ட நல்லவனுடைய தர்மபத்னியைத் தன் சினேகிதனுன ராவணன் கிஷ்கிந்தை வழியாகக் கதறக் கதற பலாத்காரமாகத் தூக்கிக் கொண்டு போயிருக்கிருன். அந்த ராமன் தன் எல்லைக்குள் வந்திருக்கும்பொழுது வாலி செய்திருக்க வேண்டியதென்ன வென்பதைப் பொதுமக்கள் சற்று சிந்தித்துப் பார்க்கட்டும்.

எவரெவர்கள் தனது ராஜ்யத்திற்குள் வந்திருக்கின்றனர் என்பதை முன்னதாகத் தெரிந்து கொண்டு அதற்கேற்றவாறு நடந்து கொள்ள வேண்டியது ஒரு மன்னனின் கடமையாகும். தானுகவே அப்படித் தெரிந்து கொண்டு நடக்கா விட்டாலும் தாரை சொன்ன பிறகாவது வாலி தன் கடமையைச் செய்ய முற்பட்டிருக்க வேண்டாமா? ராமனை உபசரிக்கா விட்டாலும் அப்படிப்பட்ட வீரன் ஸுக்ரீவனுடன் சேராத நிலைமையையாவது செய்யவேண்டுமென்ற ராஜதந்திரத்தையாவது வாலி பின்பற்றியிருக்க வேண்டாமா? தன்னை எவரும் வெல்ல முடியாத நிலைமையிருக்கிறதென்ற கர்வத்தினுலும் அவனு

டைய பத்னியைவிட்டு ஸுக்ரீவனைப் பிரித்து அவ னைத் துரத்தியுமடித்தது தவறல்லவென்றும், ஆகை யால் ராமன் அவனுக்கு உதவி செய்ய மாட்டான் என்ற எண்ணத்தினாலும் தானே, அவன் அவ்வளவு அசிரத்தையாயிருந்து தாரையினுடைய வார்த்தை களை மதிக்காமலிருந்தான்.

ராமன் சரணாகதரக்ஷண தர்மத்தைப் பெரிதும் கடைப் பிடித்தவன். தான் செய்த தவறை ஒப்புக் கொண்டு கால்களில் வீழ்ந்து தண்டனிட்டு வேண்டும் பொழுது ஸுக்ரீவனை எல்லா திக்குகளிலும் துரத்தி யடித்துத் துன்புறுத்தியதுமல்லாமல், வாலி அவ னுடைய மனைவியையும் அவனை விட்டுப் பிரித்து, அவளைத் தன் வசமும் வைத்துக் கொண்டு விட் டான். அதை மன்னிக்க முடியாத பெரும் பாபமாகவே ராமன் கருதினான். மேலும் பெரியோர் களால் ஒப்புக் கொள்ளப் படாததோடு அவர் களுடைய நிந்தைக்கும் வாலி பாத்திரமாகி யிருந் தான். அஸத்தான ராவணனுடன் ஸக்கியமும் அவன் செய்து கொண்டிருந்தான். இந்திராதி தேவர்களுக் கும், ஸாதுக்களுக்கும் விரோதியாயிருந்து அவர்களால் செய்யப்படும் உலக க்ஷேமகரமான காரியங்களுக்கு ஸஹிக்க முடியாத இடைஞ்சல்களைப் பல திக்குகளி லும், பலவகைகளாகவும் செய்துகொண்டு ஸ்திரீ லோலனாகவும் அலைந்து வந்த ராவணனுடன் உற வாடிக்கொண்டு அவனுடன் அக்னி சாக்ஷியாக பரஸ்பரம் உதவிக் கொள்ளுவதாக சிநேக ஒப்பந்த மும் செய்துகொண்ட வாலி, தர்ம விரோதி, உலக க்ஷேமத்திற்குத் தடையாயிருப்பவன் என்பது ராம னுடைய முடிவு. ஸுக்ரீவனுக்காக வாலியைக் கொன்று விடவேண்டியது அவசியமாயிருப்பினும் வேறு பல பொது நியாயங்களையும் தனிப்பட்ட அர சியல் நீதிகளையும் கொண்டு கவனிக்கும்பொழுதும் அவன் உயிர்வாழத் தகுந்தவனல்ல வென்றே ராமன் தீர்மானித்து விட்டான்.

ராவணனுக்கு நற்புத்தி வரச்செய்யவோ, அப்படி முடியாவிடில் அவனை வதம் செய்யவோ வாலியைக் கொன்றேதான் ஆகவேண்டும் என்ற அரசியல் நுட்பமான மற்ருேர் சங்கடமான நிலைமையும், வாலியைக் கொல்லாமல் விட்டுவிடலாமாவென ராமனை நினைக்க முடியாமற்கூடச் செய்துவிட்டது. எவ்விதத்திலும் வாலியைக் கொல்ல நேரிட்டால் அது குற்றமாக நினைக்கச் சிறிதும் சந்தர்ப்பமில்லையென்பதை மட்டும் ராமன் நிச்சயித்துக்கொண்டு விட்டான். சுக்ரீவனை மீட்கும் விஷயத்தில் ஒருகால் வாலி கொல்லப்படாமல் எஞ்சிநிற்க நேரிடலாமோவென்றும் ராமன் நினைத்திருக்கக்கூடும். ஆனல் அரசனுல் தண்டிக்கப்பட்டவனுக்கு பாவங்கள் நீங்குகின்றன, அவைகளுக்கு மறுவுலகில் தண்டனையில்லையென்ற நீதியிருப்பதினுல் வாலி இறந்தாலும் பரவாயில்லை, அவன் நற்கதியையே அடைவான் என்ற எண்ணமும் ராமனுக்கு இருந்து வந்தது. ஸுக்ரீவனைக் கொன்றுவிடும் எண்ணம் தனக்குக் கிடையாதென்று தாரையிடம் சொல்லிவந்த வாலி, தன் தம்பியின் கழுத்தை இறுகப்பற்றி அழுத்திக் கொன்றுவிடும் சந்தர்ப்பத்தை உண்டுபண்ணிவிட்டான். தன்னை எவ்வகையிலாவது ராமன் காப்பாற்றினுலொழிய தனக்குப் பிழைக்க வேறு வழியில்லை என்ற முடிவுக்கு வந்த ஸுக்ரீவன் சுற்றும்முற்றும் ராமனை நோக்கி விழித்துப் பார்த்தவண்ணமாகவே இருந்தான். அதைக்கண்ட ராமன், இனி ஒருக்ஷணம் கூடத் தாமதிக்கக்கூடாது. அப்படித் தாமதித்தால் ஸுக்ரீவனுடைய உயிர் நிலைக்காது என்று நினைத்து ஒரே பாணத்தை வாலியின் மார்பில் பாயவைத்து ஸுக்ரீவனைப் பற்றியிருக்கும் வாலியின் பிடியைத் தளரச் செய்துவிட்டான். வாலி மிகவும் வலுவுள்ளவன். கெட்டியான மார்பையுடையவன். தாடகையினுடைய மார்பையும், ராவணனுடைய மார்பையும் துளைத்து நுழைந்து அப்பால் சென்ற ராமபாணம் வாலி மார்பில் அப்புறம் செல்லாமல் ஆழப் பதிந்து

அத்துடன் நின்றுவிட்டதென்று கம்பன் வர்ணித்திருப்பது வாலியினுடைய மார்பின் வலுவை நிரூபிக்கக் கூடியதாயிருக்கிறது.

அழுந்தப் பதிந்த பாணம் வாலியைக் கொல்லாமல் விட்டுவிடும் நிலைமையில் மட்டுமில்லை. தன் உடலை விட்டுவிடுமாறு அவனை அது செய்துவிட்டது.

தன்னுடைய தம்பி உயிருடனிருக்கும்பொழுது அவனுடைய மனைவியை உபயோகிக்கிறவனுக்கு மரண தண்டனைதான் பிராயச்சித்தம் என மனுநீதி முதலிய தர்ம சாஸ்திரங்களின் கட்டளை. இவ்விஷயத்தை வாலியிடம் ராமனே நேரில் எடுத்துச் சொல்லியிருக்கிறான். கொல்லப்பட்டவன் கொல்லப்படவேண்டியவனே என்றிருக்கையில் கொல்லும் முறைகளைப் பற்றிய சர்ச்சை அனாவசியமட்டுமல்ல, அதிகப் பயனுள்ளதுமல்ல. அப்படித் தண்டனை விதிக்க க்ஷத்திரியனுக்கு உரிமையுண்டு என்றும், அப்படி தண்டிக்கப்பட வேண்டியவர்களை சாஸ்திர விதிகளின்படி தண்டிக்காவிட்டால் தனக்குப் பாவம் சம்பவிக்கும் என்றும் தர்ம நூற்களின் விதியை ராமன் வாலியிடம் அறிவித்திருக்கிறான். அத்தகைய தண்டனையால் வாலிக்கும் பாவம் விலகிவிடுகிறது என்ற விஷயத்தைக்கூட ராமன் அவனிடம் எடுத்துக் காண்பித்திருக்கிறான்.

## ராமன் மறைந்திருந்து பாணம் விடுவானேன் ?

ஆனால் மறைந்து அடிப்பானேன் என்று சாதாரணக் கேள்வி ஒன்று உண்டு. இதற்குச் சரியான சமாதானம் ராமனிடமிருந்து வரவில்லை, வேறு எவராலும் சிந்திக்க முடியவுமில்லை என்ற விஷயம் பலவாறு ஆஸ்திகர்கள், நாஸ்திகர்கள் எல்லோரிடமும் ஒருங்கே மனக் குழப்பதை உண்டு பண்ணி வருகிறது. கொல்லப்பட வேண்டியவன் என்ன. தவறு செய்தாலும் தான் கொல்லப்படாம

விருக்கவேண்டுமென்று சொந்த யுக்திகளையோ, வேறு வகையான தெய்வ பலத்தையோ நாடி அக்ரமம் செய்து வருவானாயின் அவனைத் தண்டிப்பது தான் எப்படி என்பதைப் பொதுமக்கள் சற்றுப் பொறுப்புடன் விடை கூறவேண்டியவர்களாயிருக்கின்றனர். அசாதாரணமான நிலைமையைச் சமாளிக்கச் சாதாரண விதிகள் வலியற்றன என்பது உலக அனுபவம். அதற்கு அசாதாரண முறைகளே அவசியமாகின்றன. அவற்றைச் சாதாரண நீதி முறைகளைக்கொண்டு எடைபோடுதல் தவறு.

பலர் பல தவறுகளைச் செய்துகொண்டு தண்டிக்கப்படாமல் யதேச்சாதிகாரமாகச் சிரஞ்சீவிகளாக வாழ முயற்சித்த விஷயமும் அவர்களுடைய புத்தி நுழையமுடியாத இடுக்குகளைக் கண்டுபிடித்து அவர்களுக்கு அளித்த வரனுக்கு விரோதமில்லாத துறைகளிலிறங்கி அவரவர்களுடைய விபரீத வாழ்க்கைகளை முடிவுறச்செய்து உலகிற்குப் பகவான் நன்மையை உண்டுபண்ணியிருக்கும் விஷயங்களும் சரித்திரங்களில்பலவாறு காணக்கிடைக்கின்றன. இப்பொழுது தற்காலவுலகில், இவ்விருபதாம் நூற்றாண்டிலும்கூட, பிரஜைகளுக்கு உதவச் செய்யப்பட்ட சட்டங்களின் உதாரப் போக்கை எத்தனை பேர்கள் துர்விநியோகப்படுத்திக்கொண்டு தண்டனைக்கு உள்ளாகாதவாறு தங்களுடைய விஷமங்களை விடாமல் பிடிவாதமாகச் செய்து வருகின்றனர்? சாதாரணச் சட்டங்களின் பிரயோகங்களுக்கு அகப்படாமல் உலக அமைதிக்குப் பங்கம் விளைவிக்கும் ரீதியில் நடப்பவர்களை விசாரணையில்லாமல் உள்ளே அடைத்து வைத்து அவர்களுடைய விஷமச் செய்கைகளைத் தடைப்படுத்துவதற்கெனத் தனிச் சட்டங்களை அரசாங்கம் வைத்திருக்கவில்லையா? விசாரணையில்லாமல் காலவரையின்றி அடைத்து வைப்பது தவறு, பிரஜா சுதந்திரத்திற்கு விரோதமானது என்று தங்கள்மீது குற்றஞ்சாட்டுகிறவர்களிடத்தில் அரசாங்கம் என்ன பதில் கூறுகிறது? அவ்விதச் சட்டம் உலகம்

முழுவதிலுமுள்ள எல்லா நாடுகளிலுமிருந்து தான் வருகிறது. பொதுவாக விசாரணையில்லாமல் காவலில்காலவரையில்லாமல் அடைத்து வைப்பது நியாயமற்றதெனத் தோன்றிய போதிலும், பொதுஜன அமைதிக்கும் க்ஷேமத்திற்கும் அரசாங்க அமுலுக்கும் சட்ட பரிபாலனங்களுக்கும் அகப்படாமல் ஓர் ஸ்தம்பனமான நிலைமையை உண்டுபண்ணுகிறவர்களை, நேர்மையற்றதெனச் சாதாரணமாகத் தோன்றக்கூடிய, ஓர் பெரிய அசாதாரண யதேச்சாதிகார யுக்தியால்தானே கட்டுப்படுத்திவைக்கமுடிகிறது. வெளியில் நியாயமற்றதென சாதாரணச் சட்டங்களைக் காண்பித்து வாதிக்கிறவர்களுக்கு அவர்களுடைய மனச்சாக்ஷி உள்ளூர என்ன சொல்லும்? தர்மமுறையில், தங்களுடைய காரியங்களை விட உலக காரியம் பெரியது என்ற பொறுப்புடன் நேர்மையாகச்சிறிது சிந்தித்துப் பார்ப்பவர்களுக்குத் தங்களுடைய தவறு தோன்றாமல்போகாது. அரசாங்கத்திற்கு இவ்விதமுறையைக் கையாண்டாலொழிய வேறுவழிகிடையாது என்பது அவர்களுக்கும் எளிதில் புலப்படும். இந்த நுட்பமான உண்மையை வாலியிடம் ராமனும் கூறியிருக்கிறான். 'ஏதோ மனம்போனபடியெல்லாம் நீ என்னை உதாஸீனமாகப் பேசியபோதிலும் சற்றுயோசித்தாயானல் உனக்கு உன் அந்தராத்மா (மனச்சாக்ஷி) நீ கொல்லப்பட்டது நியாயம் என்பதையே உனக்கு அறிவிக்கும்' என்று ராமன் வாலியிடம் அறிவித்த விஷயத்தில் இவ்வாழ்ந்த உலக அனுபவமும் தர்ம ஸூக்ஷ்மமும் பதிந்து கிடக்கின்றன.

தன்னை எதிர்த்துப் போரிடுகிறவர்களுடைய பாதிபலம் தனக்கு வந்துவிடும்படியான வரப்பிரஸாதத்தை வாலிபெற்றவன் என்று கம்பர் கூறியிருக்கிறார். வாலிவிஷயமாகக் **கம்ப ராமாயணம் கிஷ்கிந்தா காண்டம்** நட்புக் கோட்படலம்-40-வது **கவியில் இதைக் காணலாம்:**

கிட்டுவார் பொரக் கிடைக்கினன்னவர்
பட்ட நல்வலம் பாகமெய்துவான்

(இ-ள்) கிட்டுவார் பொர கிடக்கின்-நெருங்குபவர்களாய்ப் போர்செய்தற்கு (யாவராயினும் எதிரில்) வந்தால், அன்னவர் பட்ட நல்வலம்-அவர்கள் முன்பு அடைந்துள்ள நல்ல உடல்வலிமையில், பாகம்-பாதி பாகத்தை, எய்துவான்-அடைபவன்... என்பது கற்றறிந்த கம்பராமாயண உரை ஆசிரியரான ஸ்ரீ. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியரின் பதவுரை)

இவ்விஷயம் அப்படியே வால்மீகி ராமாயணத்தில் காணப்படவில்லை. ஆயினும் வாலியின் கழுத்திலுள்ள (தேவேந்திரனுல் கொடுக்கப்பட்ட) மாலைக்கு ஏதோ விசேஷசக்தி யிருக்கிறதாகமட்டும் பலவிடங்களில் தெளிவாகவே வால்மீகியால் குறிப்பிடப்பட்டிருக்கிறது. வாலியுடன் சிலநேரம் யுத்தம் செய்தபின் ஸுக்ரீவன் தளர்ந்தான் என்றும், வாலியின் வலுவு (அவர்த்தத) வளர்ந்தது என்றும் கூறப்பட்டிருக்கிறது. அந்த மாலை தன்கழுத்தில் உள்ளமட்டும் தன் ஸ்ரீ (ஒளி) குன்ருதென்றும், தான் இறக்கும் சமயம் வந்துவிட்டமையால் அந்த மாலையை எடுத்து அணிந்துகொள்ளுமாறும் ஸுக்ரீவனுக்கு வாலி கூறுவதிலிருந்தும் தன் சொந்தவலுவோடு தெய்வ வலுவும் அவனுக்குத் துணையாயிருந்த தென்றும் அதற்கு அந்தமாலைதான் காரணமென்றும் தெரிய வருகிறது.

மாலையால் வாலிக்குத் தனி அருள் இருப்பதை வால்மீகி குறிப்பிட்டிருப்பதை, எதிரியின் பாதிபலம் வாலிக்கு வந்துவிடுவதான வரமிருக்கிற தென்று கம்பர் அறிவித்திருப்பதோடு சேர்த்துப் பார்ப்போமாயின், மறைந்தே வாலியைக் கொல்லவேண்டிய அவசியமான சந்தர்ப்பம் ராமனுக்கு இருந்திருக்கக் கூடுமென நிச்சயிக்கவேண்டியிருக்கிறது. வால்மீகி ராமாயணத்தைத் தவிர வடமொழியில் இயற்றப்

பட்ட ராமாயணங்கள் வேறு இரண்டு இருப்பதாகக் கம்பன் அறிவித்திருக்கிறபடியால் அவர் கூறுவதற்கு ஆதாரம் மற்ற இரண்டு நூற்களில் எதிலாவது இருக்கலாமென்றே நாம் நினைக்கலாம். எதிரிகள் தன்னை எளிதில் வெல்லமுடியாத தெய்வ வரப்பிரசாதத்தை வாலி உடையவன் என்ற விஷயத்தைப் பொறுத்தமட்டில், எவ்வித சந்தேகத்திற்கும் இடம் கிடையாது. ஆகையால் தன் வரப்பிரஸாத வலுவால் அதர்மங்களைச் செய்துகொண்டு தன்னை எவரும் வெல்லமுடியாது என்ற இறுமாப்பையும் அடைந்திருந்த வாலியைக் கொல்ல வேண்டுமென்று தீர்மானித்த ராமனுக்கு மறைந்து அடிப்பதைத் தவிர வேறுவழி கிடையாது. உலக க்ஷேமத்திற்கும், அரசாங்க தர்மபரிபாலனத்திற்கும் இடையூறாகவுள்ள மனிதர்களையோ, துஷ்டமிருகங்களையோ வளரவொட்டாமல் தடுப்பதற்கு எவ்வித உபாயங்களைக் கையாண்டாலும் நியாயமென்றே தான் உலகம் ஒப்புக்கொண்டிருக்கிறது. அனுபவத்தில் அது அமுலிலேயும் இருந்துவருகிறது. ஊரை அழித்துவரும் சிங்கம், புலி முதலிய வலுவுள்ள மிருகங்களை ராஜாக்கள் ஆகாரத்திற்கு உபயோகப்படாதிருக்கும் காரணத்திற்காக அடித்துக் கொல்லாமலிருப்பதில்லை. அவைகளுடன் எதிரில் யுத்தம் செய்து அடிக்காமல் மறைந்து கொல்லுவதற்காக, அரசன் வீரனில்லை, அவைகளை மறைந்து அடித்தது நியாயமில்லை, அவன் தர்மிஷ்டனில்லை என்று சொல்லுவதும் வழக்கமில்லை. அவ்வளவு தூரம் வெகு சாமர்த்தியமாக ராமனுடன் வாதாடிய வாலி, தான் செய்த எல்லாக் காரியங்களைப்பற்றியும் ஏன் சிறிதும் சமாதானம் கூறமுற்படவில்லை? தான் செய்தவை யெல்லாம் நியாயமானவைகள் என்று சாதிக்கவும் அக்கரைப்படவில்லை. தன் தம்பி மனைவியை அவளுடைய பர்த்தாவை விட்டுப் பிரித்துத் தன்னிடம் வைத்துக்கொண்டதைப் பெரும் குற்றமாக ராமன்கூறும்பொழுது அதற்குத் தகுந்த சமா

தானம் கூறவேண்டியது அவசியமில்லையா? தான் விலங்கு இனம் என்று சொல்லிவிட்டால் போதுமா? அவனுடைய பேச்சுக்களெல்லாம் விலங்குமுறையிலு மில்லையே? தான் ராவணனுடன் ஸக்யம் செய்து கொண்ட விஷயங்களைப்பற்றியெல்லாம் அவன் பேசாமலேயே இருந்ததின் மர்மமென்ன?

ஆகையால் எல்லாவிதமான நியாயங்களையும் கவனிக்கும்பொழுது, மறைந்து அடித்த காரணத்தைப் பொருட்படுத்திப் பெரிதாக்கி வீம்புக்காக ராமன்மீது பழி சுமத்துவதற்கென வாலியைக் கொன்றது தவறுஎன்று சொல்லுவது அர்த்தமுள்ள தல்லவென்றும், அந்தநிலைமையில் ராமன் வேறு எதையும் செய்திருக்கமுடியாதென்றும் நிச்சயிப்ப தோடு, (பொதுவாக அவன் செய்வதே தர்மமாகு மெனப்படும் விஷயம் ஒருபுறமிருக்க) அந்தச் சிக்கலான சூழ்நிலையில் மனம்தளராது ராமன் தன் தர்மத்தை எவ்விதச் சந்தேகமுமின்றித் துணிந்து செய்தது மிகவும் போற்றத்தகுந்த விஷயமேயாகு மென்றும் உறுதி கொள்ளுவதுதான் நியாயமாகும்.

ராமன் மறைந்திருந்து வாலிமீது பாணம் போட்ட விஷயத்தில் மற்றோர் சர்ச்சையுமிருந்து வருகிறது. ராமன், லக்ஷ்மணன், ஸுக்ரீவன், ஹனுமான், நளன், நீலன், தாரன் எல்லோருமே கிஷ்கிந்தைக்குச் சென்றனர் என்றும், அங்கு நெருக்கமான காட்டில் மரங்களாலே தங்களை மறைத்துக்கொண்டு நின்றனர் (கிஷ்கிந்தாகாண்டம் ஸர்க்கம் 14-சுலோகம் 1) என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. பிறகு ஸுக்ரீவன் மிகுந்தகோபத்துடன் பலத்த சப்தத்தைச் செய்துகொண்டு யுத்தத்திற்காக வாலியை அழைத்தான் என்றும், அச்சமயம் ஸுக்ரீவன் தன் பரிவாரங்களால் சூழப்பட்டிருந்ததாகவும் அடுத்த 2, 3 சுலோகங்களில் காணப்படும் வரலாறு. அந்த சப்தத்தைக் கேட்டு யுத்தத்திற்குக் கிளம்பிய வாலியைத் தாரை தடுத்தாள். முதலில்

முறியடிக்கப்பட்ட ஸுக்ரீவன் மறுபடி வரு வதைக் கவனித்தால் ஏதோ உதவியின் வலுவில் தான் அவன் வருவதாகவும், அவனுக்கு அயோத் யாதிபதியின் வீரர்களான புத்ரர்கள் ராம,லக்ஷ்மணர் களுடைய ஆதரவு இருக்கக்கூடும் என்றும், அவர் களை வெல்லுவது மிகவும் கஷ்டமென்றும் தாரை அச் சமயம் வாலியை எச்சரித்திருக்கிறுள். வாலியும் ஸுக்ரீவனுடன் யுத்தம் செய்ய வரும்பொழுது எல் லாப் பக்கங்களிலும் கண் பார்வையைப் போட்டுக் கொண்டு வந்ததாகவும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. ராமன் வாலியைக் கொன்ற விஷயத்தை நாரதர் (ஸங்க்ஷேப ராமாயண மூலம் வால்மீகி மஹரிஷியி னிடம்) கூறும்பொழுதும், ஆஞ்சநேயன் ஸீதை யிடம் அந்த சமாசாரத்தைத் தெரிவிக்கும்பொழுதும் யுத்தத்தில் (ஆஹவே, ஸம்யுகே, யுத்தே) ராமன் வாலியைக் கொன்றதாகவே தவருமல் குறிப்பிடப் பட்டிருக்கிறது. 'யுத்தத்தில்' எனப்படும் வார்த்தைக்கு 'ஸுக்ரீவ-வாலி த்வந்துவ யுத்தத்தில்' எனப் பொருள் கூறுவது இயற்கையானதாகச் சொல்ல முடியாது. ஆகையால், 'யுத்தத்தில்' ராமன் வாலியைக் கொன்றதாகவேதான் கூற வேண்டிவருகிறது.

ஸுக்ரீவன் 'தன் பரிவாரங்களால்சூழப்பட்டிருந் தான்' என்பதையும், அவனுக்கு ராமலக்ஷ்மணர்கள் உதவியாக வரக்கூடுமென்று தாரை எச்சரித்ததை கவனத்தில் வைத்துக்கொண்டு எல்லாப்பக்கங்களி லும் வாலி பார்த்துக்கொண்டு ஸுக்ரீவனுடன் யுத் தம் செய்ய வந்ததையும் கவனிப்போமாயின் அவ் விருவர்களுக்கும் நடந்த யுத்தம் த்வந்த்வ யுத்தம் தான் என்று முடிப்பதற்கில்லை. வேறு வகையில் பொதுவான யுத்தம் தான் என்றும், அதில் நேரில் வருவதோ, மறைந்து அடிப்பதோ எல்லாம் சந்தர்ப் பத்திற்கேற்றவாறு அவரவர்கள் செய்துகொள்ள வேண்டிய தீர்மானத்தைப் பொறுத்ததென்றுமே நாம் நிச்சயிக்கவேண்டியிருக்கிறது. இந்நிலைமையில்

எதிரிகளை வெல்லும் உபாயம் எதுவோ அதை அவரவர்கள் பின்பற்றத் தடையில்லை. இக்காலத்திலும் மறைந்திருந்து அடிக்க வசதிகளை வைத்து கோட்டைகளை நிர்மாணிப்பதும், பள்ளங்களை வெட்டிக்கொண்டு அவைகளில் பதுங்கியிருந்து எதிரிகளை அடிப்பதும் ஓர் யுத்த முறையாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் முறைதானே. 'நிகும்பிளா யாகம் மூலம் மறைவாக இருக்கும் நிலைமையை இந்திரஜித் தனக்கு உண்டு பண்ணிக்கொண்டு ராமலக்ஷ்மணர்களுடைய கண்களுக்குப் புலப்படாமல் அவர்கள் மீது பாணங்களைப் பிரயோகம் செய்து அவர்களைப் பாசபத்தர்களாகச் செய்யவில்லையா? ஸாம, தான, பேதங்கள் போன்ற உபாயங்கள், எதிரிகளை வஞ்சித்து அவர்களுக்கு ஓர் விதமான பலஹீன நிலைமையை உண்டுபண்ணி, சமயம் பார்த்து அவர்களை வெல்ல ஏற்பட்டவைகள் தானே. தனிப்பட்ட மனிதனுக்கு ஏற்பட்ட நியாயத்தை ஒரு க்ஷத்ரியனுக்கு உபயோகப்படுத்துவது சரியல்ல. அதிலும் எதிரிகளை வெல்லவேண்டிய யுத்த காலத்தில் சாதாரண நியாயங்களுக்கு இடமே கிடையாது. ஸுக்ரீவனுக்கு உதவியாக வந்த ராமன் எவ்விதத்தில் அவனுடைய எதிரியைக் கொன்று, அவனுக்கு நன்மையைத் தேட முடியுமோ அவ்வழிகளைத் தேடவேண்டிய நிலைமையிலேதானே இருந்து வந்தான். சில்லறையான நியாயங்களைக் கவனித்துக் கொண்டு, தன் பிராணனை இழக்கும்படியான நிலைமையை ஸுக்ரீவனுக்கு ஏற்படுவதை ராமன் பார்த்துக்கொண்டிருக்க முடியுமா?

யுத்த ஸந்நிவேசங்களைக் கவனிக்காமல் பராங்முகனாக (உற்று நோக்காதவனாக) வாலி இருந்து வந்தால் அது எப்படி ராமனுடைய குற்றமாக ஆகும்? மறுபடி ஸுக்ரீவன் யுத்தத்திற்குத் தன்னை அழைப்பதையும், சமயோசிதமாகத் தகுந்த யுக்திகளைக் கொண்டு தாரை அவனுக்கு எச்சரித்ததையும் ஆழ்ந்து உற்று கவனிக்காமல் 'பராங்முகமாக',

அசிரத்தையாக, வாலி இருந்து வந்ததற்காக ராமன் இவனை விட்டுவிடவேண்டு மென்பது என்ன நியாயம்? அதற்கு ராமனைக் கேட்டால் ராமன் என்ன சொல்லுவான்? 'நீ ஜாக்ரதையாயிருந்துவருவதை நான் தடுக்கவில்லையே. நீ அசிரத்தையாக இருப்பது என் குற்றமா? எல்லாவற்றையும் ஆழ்ந்து கவனித்தல்லவா நீ யுத்தத்தில் இறங்கியிருக்க வேண்டும்?' என்று தானே ராமன் பதில் கூற முடியும். அவ்வளவு தூரம் பதில் கூற வேண்டிய அவசியத்தைக் கூட ராமன் கருதவில்லை. 'அரசர்கள் ஆகாரத்திற்காக மட்டுமல்ல. வேறு விதமாக உலக க்ஷேமத்திற்கு இடையூருக இருக்கும் மிருகங்களைக்கூடக் கொல்லுவது இயற்கைதான். எதிரில் நின்றுதான் அவைகளைக் கொல்லவேண்டுமென்ற நிர்ப்பந்தமில்லை. அவர்கள் பயந்து ஓடுவதற்காகவோ, எதிர்முகமாக வரவில்லையென்பதற்காகவோ கொல்லப்பட வேண்டிய மிருகங்களைக் கொல்லாமல் விட்டுவிடுவதில்லை. நீ மிருக இனத்தைச் சேர்ந்தவன் தானே' என்று ராமன் வேறு வகையாகவும் ஓர் பதிலை வாலிக்குக் கூறிவிட்டான். சகோதர பத்னியைச் சேருவது அதர்மம் என்ற நியாயங்கள் தங்களுக்கு ஏது என்று கூறும் வாதமும் அர்த்தமற்றது. அப்படியானல் அவ்விலங்கு இனங்களைக் கொல்லுவதற்கு யுத்த தர்மங்களைப் பின்பற்ற அவசியமில்லாமலும் ஆகிவிடுகிறது. ஆகையால் எவ்விதத்திலும் ராமன் வாலியைக் கொன்ற முறை அதர்மம் என்று சொல்லுவதற்கில்லை என்ற இக்கக்ஷியைப் பொது மக்கள் பரிசீலனை செய்ய வேண்டிய அவசியமிருக்கிறது. எல்லாவற்றையும் நன்ருக ஊன்றிக் கவனிப்பவர்களுக்கு ராமன்மீது வாலிவத சம்பந்தமான அபவாதத்தைச் சுமத்த அடியோடு சந்தர்ப்பமே கிடையாது என்பது சந்தேகமறப் புலப்படும்.

## ராமன் சந்தேக மனம் படைத்தவனா ?

ராமன் மிகக் கோழை. அடிக்கடி தன்னுடைய மனைவியைப் பற்றி சந்தேகப்பட்ட வண்ணமாகவே இருந்திருக்கிறான். ராவண வதத்திற்குப்பின் ஸீதை அக்னிப் பிரவேசம் செய்யும்படியான நிலைமை உண்டாயிற்று. பிறகு ராம பட்டாபிஷேகம் ஆகி நெடுங்காலம் கடந்த பின்னரும் ஊர் வம்புப்பேச்சைக் கேட்டு கர்ப்பிணியாயிருந்தவளைக் காட்டில் கொண்டுவிடும்படி செய்து விட்டான். குச, லவர்கள் அவனுடைய பிள்ளைகள்தான், ஸீதை சுத்த சரிதமுடையவள்தான் என்று வால்மீகி மஹரிஷி பிரதிஜ்ஞை செய்ய வேண்டியதாயிற்று. தான் சுத்தமாயிருந்தால், தன் தாயான பூமாதேவி இடம் கொடுக்கட்டும் என்று அவள் சபதம் செய்தாள். அப்படியே பூமிதேவியும் இடம் கொடுக்க ஸீதை உள் சென்று மறைந்தாள். ராமன் மிகக் கோழை, மிகுந்த சந்தேக மனப்பான்மை கொண்டவன் என்பதை இவைகள் நிரூபிக்கக் கூடியவைகளாயிருக்கின்றன வென்று ராமனை இகழும் நோக்கம் கொண்ட வம்பர்களின் மற்றோர் புகார்.

## மக்கள் அபிப்ராயத்தை அதிகமாக மதிக்கும் ராமன்

நல்ல எண்ணத்துடன் உண்மையை ஆராயும் மனப்பான்மை கொண்டவர்களுக்கு இக் குற்றமும் ஆதாரமற்றதெனத் தெளிவாகும். இவ்விதப் பரீக்ஷைகளை ஸீதை கடந்தவுடன் அவளிடம் ராமன் ஸமாதானம் செய்திருக்கும் முறைகளைக் கவனித்தால் உலக அபிப்ராயத்தைத் தெரிந்து கொண்டு அதை மதிக்கும் கருத்துக் கொண்டே அவன் அவ்வாறு செய்தானேயொழிய ஸீதையினிடம் அவனுக்குள்ள சந்தேகத்தாலுமல்ல, தன்னுடைய கோழை மனதாலும் அல்லவென்பது கண்டிப்பாக விளங்கும். ஆழ்ந்த புத்தியுடன் நேர்மையாகப் பார்த்தால் ராமன் தன் பத்னியைவிடப் பொது மக்களை மதிக்கும்

மேலான குணமுள்ள சிறந்த மன்னன் என்றுதான் சொல்ல நேரிடும்.

நெடுங்காலம் ராவணனுடைய வசமிருந்த ஸீதையைக் கண்டவுடனே அவளிடம் பாசத்தை வெளியிட்டு அவளுடன் உறவாடப் புகுந்தால், 'ராமன் காமப்பித்தன், மனோபலமில்லாத கோழை, ஸீதையைக் கண்டதும் பரபரப்புடன் அவளிடம் சேரத் துணிந்து விட்டான்' என்று அவனைத் தூற்ற வேண்டிவரும். அப்படிக்கின்றி வெகு அழுத்தமான மனோ தைரியத்துடன் அவளைப் பார்க்கவும் தன் கண்கள் பிரியப்படாமல் கூச்சமடைகின்றன வென்று சொன்னவன் மிகுந்த வலுவான மனதுடையவன் என்றல்லவா போற்றப்படவேண்டும்? தன் பத்னியைவிட மிகச் சாதாரணமான பொதுமக்கள்கூடப் பெரிதும் மதிக்கத்தகுந்தவர்கள், தன் பொதுவான ராஜ்ய வாழ்க்கை மட்டுமல்ல, சொந்தமான தனிப்பட்ட தன் பத்னியுடன் வாழும் குடும்பவாழ்க்கைகூடப் பொது மக்களுடைய விருப்பத்திற்குட்பட்டது என்று ராமன் நினைத்தான். இது அவனுடைய உயர்ந்த குணம். தன் கக்ஷியே வெறுக்கும் காலத்தில், அது பிளவுண்டு பலஹீனமடைந்து கெடுவதையும் கூட பொருட்படுத்தாமல் விவாகத்திற்கு லாயக்கில்லாத சரீரத்திற்கு ஒரு கொழுத்த குமரியின் உறவைத் தேடிக்கொண்ட பிரக்ருதிகள் எப்படி இவ்வுயர்ந்த தன்மையை உணர முடியும். வாரிசுக்காகக் கல்யாணம் செய்து கொண்டதாகவும், மணமகள் தன் இஷ்டப்படி இருப்பதில் தனக்கு எவ்வித ஆக்ஷேபணையும் கிடையாது என்பதாகவும் துணிந்து பேச வெட்கப்படாதவர்களுக்கு ஸீதையின் நடத்தையும் அடியோடு புரியாததுதான். வாலிழந்த நரி வாலின் கௌரவத்தைப்பற்றி எப்படிப் பேசமுடியும்? ஏமாந்த நரிகள் தங்களுடைய வால்களையும் நறுக்கிக்கொண்டு தன்னுடைய கோஷ்டியில் சேர்ந்த மட்டும் சேரட்டுமே என்று தானே அது நினைக்கமுடியும்! வாலையும் இழந்து சாயக் கிடங்கிலும் வீழ்ந்து எழுந்த நரி ராஜாவின் குட்டு ஒருநாள்

வெளிவந்துதானே ஆகவேண்டும்? அமாவாசை வந்து நீங்கட்டும், கவனிப்போம் சாய நரி ராஜாவின் நிலைமையை!

### சீதைக்கு அறிவுறுத்தும் சொற்கள்

ராவண வதத்திற்குப் பின் தன் முன் வந்து தலை குனிந்து நின்ற ஸீதையைக் குறித்துக் கடும் சீற்றத்துடன் ராமன் பேசிய வார்த்தைகளும் சிலரைக் கலக்கியிருக்கின்றன. பெருந்தன்மையின்றி வாயில் வந்ததையெல்லாம் ராமன் பேசியிருக்கிறான். இது அவனுக்குத் தகாது என்றும் அவர்களை மனக் கசப்புடன் பேசச் செய்துவிட்டன. 'உன்னைத் திரும்ப அழைத்துச் செல்லும் நோக்கத்துடன் ராவணவதம் செய்து உன்னை நான் மீட்கப் பாடுபடவில்லை. நெடுங்காலம் ராவணவசமிருந்தவளை எவன் அங்கீகரிக்கத் துணிவான்? லக்ஷ்மணனுடனாவது, பரதனுடனாவது அல்லது ஸுக்ரீவன், விபீஷணனுடனாவது இருக்க நீ நினைக்க வேண்டுமேயொழிய என்னுடன் சேரும் அபிப்பிராயத்தை நீ விட்டுவிட வேண்டியதுதான். அல்லது அவர்களுடனிருக்கப் பிரியமில்லாவிட்டால் நீ இஷ்டப்படி எங்கு வேண்டுமானாலும் செல்லலாம்' என்று அவளிடம் ராமன் அறிவித்தான்.

இது பெருந்தன்மையற்ற பேச்செனத் தோன்றும். ஆனால் இதற்கு முற்பட்ட விஷயங்களனைத்தையும் சற்றுப் பொறுமையுடன் நிதானமாகக் கவனிப்பவர்களுக்கு புண்பட்ட ராமனுடைய மனம் சமயோசிதமாகவும், அகங்காரமடைந்த பெண்ணினத்திற்குப் புத்தி புகட்டும்படியும் வேறு வகையில் எதையும் பேச நினைத்திருக்கமுடியாது என்பது விளங்கும்.

'காட்டு வாழ்க்கை மிகவும் கஷ்டம். பரதன் அதீனமாக இரு' என்று சொன்ன வார்த்தைகளை ஸீதை கேட்கவில்லை. அவளைப் பாதுகாக்கும் சிரமம்

தனக்கு ஏற்படும் என்று ராமன் அறிவித்ததற்கு பெண்மைத்தனமான பேச்சாயிருக்கிறதே, ஆண்மைத்தனமில்லையா வென்று அவனை அவள் முதலில் துணிந்து இடித்துப் பேசினாள். அப்பொழுது தன்னுடன் கூட வந்து தன்னிடம் ஆண்மைத்தனமுமிருக்கிற தென்பதை அவள் நேரடியாகத் தெரிந்து கொள்ளட்டும் என்று நினைத்து நிர்ப்பந்தமாக ஸீதையை ராமன் தன்னுடன் கானகம் அழைத்து வந்தான். பிறகு மாரீசனைப் பின்பற்றிச் செல்லும்பொழுது அவளைப் பாதுகாக்குமாறு லக்ஷ்மணனை பின் விட்டுச் சென்றான். பரதன் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு அயோத்தியில் அடக்கமாக வாழ்ந்து வந்தால் தனக்கு அவளைப் பாதுகாக்கும் சிரமம் ஏற்படாது என்று நினைத்த ராமனுடைய முதல் எண்ணத்தை நிறைவேற வொட்டாமல் அவள் செய்து விட்டாள். பிறகு லக்ஷ்மணனுடைய ஹிதமான வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு பஞ்சவடியில் இருந்து வந்தால் ராவணனால் தூக்கிக் கொண்டுபோகப்படும் கஷ்டமாவது ஏற்படாமல் இருந்திருக்கும். அதற்கும் அவள் கட்டுப்படாமல் தன் அழகின் பெருமையைப் பெரிதென நினைத்து அதில் உலகு மயங்குகிறதாகவும், பரமபாகவத சிரேஷ்டனாகவும் சுத்த மனதையுடையவனாகவுமுள்ள லக்ஷ்மணனையும் இறுமாப்புடன் உதாஸீனம் செய்து, அவனைச் சந்தேகித்து, அவனுடைய நல்வார்த்தைகளையும் ஒதுக்கித்தள்ளி, ராவணவதம் முடியவுள்ள .பல கஷ்டங்களைத் தனக்கு அவள் கொடுத்துவிட்டாள். அடக்கம், நல்லோர்களையும் அவர்களுடைய வார்த்தைகளையும் மதிப்பது, அஹங்காரமில்லாதிருத்தல் முதலிய நற்குணங்களில் புத்தியைச் செலுத்தாமல் தன்னுடைய புத்திசாலித்தனத்தையும், சரீர வடிவழகையும் அதன் விபரீத ஸ்வபாவங்களையும் பெரிதும் பொருட்படுத்தியதால் தானே, இத்தனை கஷ்டங்களுக்கும் அவளும் தானும் ஆளாக நேரிட்டு விட்டது என்பதை மனதில் கடுமை

யாக உணர்ந்த ராமன் இனிமேலாவது அவள் அடக்கமாக நடக்கும் புத்தியைப் பெறட்டுமென்று அவ்வாறு பேசினான்.

லக்ஷ்மணன், பரதன் முதலியோர்களான சகோதரர்களிடம் மட்டுமல்ல, தாஸர்களாகவும், சகோதர ஸ்தானத்திலு முள்ளவர்களுமான விபீஷணன், ஸுக்ரீவன் முதலியோர்களிடம் இருக்க நேரிட்டாலும் இருக்கச் சொன்னாலும் அடக்கமாக அவர்களிடம் இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும், மனதைப் பண்படுத்திக் கொள்ளவேண்டும், அவர்களை மதிக்கவேண்டும், தன் அங்க அமைப்பையும், அழகையும் பெரிதாக நினைத்து அவைகளில் அவர்கள் ஏமாந்து ஈடுபட்டுவிடக் கூடுமெனத் தவறாக நினைத்து அவர்களை உதாஸீனம் செய்யும் கர்வபுத்தி போக வேண்டும் என்பது ராமனுடைய அந்தரங்க அபிப்ராயம். தன் நடத்தையைப் பாதுகாத்துக்கொள்ளும் மனவுறுதி கொண்ட ஸ்த்ரீ யாரிடமிருந்தாலென்ன? தற்பாதுகாப்பில் புத்தியைச் செலுத்துவதை விட்டுப் பிறருடைய குணகுணங்களை விமர்சம் செய்யக்கூடாது என்பதை அழுத்தமாக ஸீதையின் மனதில் பதிய வைக்க விரும்பிய ராமன் வேறு எவ்வகையில் தான் பேசியிருக்க முடியும் என்பதை அவசர, அஹங்கார புத்திபடைத்தவர்கள் சற்று அடக்கமாகச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அப்பொழுதுதான் ராமன் ஸீதையிடம் அச்சமயம் பேசிய வார்த்தைகள் ஆண்மைத்தனம் நிரம்பியவை, மிகவும் கம்பீரமானவை, சமயோசிதமானவை என்பது தெரிய வரும்.

### ராமன் சகோதரச் சண்டையை மூட்டவில்லை

ஸுக்ரீவன், விபீஷணன் முதலியோரை அவரவர்களுடைய தமையன்மார்களுக்கு விரோதமாக நடக்கச் செய்து அம்மூத்தோர்களைக் கொன்று இளையவர்களுக்கு ராமன் அரசைக் கொடுத்தான்.

என்று மற்றோர் வம்புவாதம். இதுவும் அர்த்தமற்

றது. ஸுக்ரீவனையோ, விபீஷணனையோ தங்களுடைய தமையன்மார்களுடன் விரோதமாகக் கிளர்ச்சி செய்யுமாறு ராமன் அவர்களைத் தூண்டவில்லை. தன்னைக் காப்பாற்றுமாறு வேண்டிய அவ்விருவர்களிடமும் தர்மமிருப்பதாகத் தெரிந்த பின்னரே ராமன் அவர்களுககு உதவிசெய்தான். ராமனுக்குத் தம்பியென்றும் தமையன் என்றும், வேண்டியவன் என்றும் வேண்டாதவன் என்றுமுள்ள தனிப்பட்ட விவகாரமே கிடையாது. தர்ம விருத்தமாக நடப்பவர்கள் தன் தந்தையாயிருந்தாலும், தாயாக இருந்தாலும், தம்பிமார்களாயிருந்தாலும், தன் அழகு வாய்ந்த மனைவியாயிருந்தாலும் வெறுத்து விலக்கும் ஸ்வபாவமுள்ள ராமன்மீது, தம்பிமார்களுக்குச் சலுகை காண்பித்தான், தமையன்மார்களை தண்டித்தான் என்றெல்லாம் குற்றஞ்சாட்டுவது பொருத்தமுள்ளதல்ல.

## சம்புக வதம்

> கடவுளைக் காணும்பொருட்டு தவம் செய்த சம்புகன் என்ற (நான்காம் வர்ணமாகிற சூத்ர ஜாதியில் பிறந்த) வனை ராமன் கொன்றது தவறென்று கூறி, சூத்ர ஜாதியில் பிறந்தவனுக்குக் கடவுளைக் காண உரிமையில்லையா ?

என்றும் சிலர் வினவுகின்றனர். கடவுளைக் காண எவருக்கும் உரிமையுண்டு. அப்படிப்பட்ட நோக்கத்தை எல்லா ஜீவராசிகளும் கொள்ள வேண்டியது அத்யாவசியமென்பதை சாஸ்திரங்களே வற்புறுத்தியிருக்கின்றன. அவ்வித எண்ணத்தைக் கொண்டவர்களுடைய கார்யங்களுக்கு இடையூறு செய்கிறவர்களைத் தடுத்து விலக்குவதையே தன் (அவதாரத்தின்) வாழ்க்கையின் பயனாக ராமன் கொண்டவன். அந்நிலைமையில், கடவுளைக் காண முயற்சித்ததற்காக ராமன் சம்புகனைக் கொன்ருன். சம்புகன் சூத்ர வர்ணத்தைச் சேர்ந்தவன் என்பதற்காக பிராமணர்

களுடைய தூண்டுதலின் பேரில் கொன்முன் என்றெல்லாம் நினைப்பதும், ராமன்மீது குற்றத்தைச் சுமத்துவதும் அர்த்தமற்றது. அதர்மத்தைப் பேசுகிறவர்களும், ஆதரிக்கிறவர்களும் ப்ராம்மணர்களாயிருந்தாலும் ராமன் கண்டிக்கும் தன்மையுடையவன் என்பது சித்ர கூட பர்வதத்தில் நாஸ்திக வாதம் பேசிய ஜாபாலி மஹரிஷியை அவன் கண்டித்ததிலிருந்து நன்கு தெரிந்து கொள்ளலாம். எவராயிருந்தாலும் தர்மத்திற்கு முரண்பாடாக நடக்கிறவர்களை ராமன் சிறிதும் தாக்ஷிண்யப்படாமல் கோழை மனதின்றி கண்டிப்பாக வெறுப்பவன். ப்ராம்மணர்கள் என்பதற்காகச் சலுகையையும், மற்ற வர்ணத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்காகப் பக்ஷபாதமாக வெறுப்பையும் காண்பிக்கும் தன்மையும் ராமனிடம் அடியோடு கிடையாது. பக்தி சிரத்தையுடன் நியாயத்தைப் பின்பற்றித் தன் கடமையைச் செய்த ஜடாயுஸ் என்ற கழுகு இனத்தைச்சேர்ந்த பக்ஷிக்கு உத்தர மரணக்ரியைகளை (ஈமக் கடன்களை) கண்ணும் கண்ணீருமாக முடித்த ராமன் மனித வர்க்கத்தில் பிறந்த சம்புகனிடம் அனுதாபமில்லாதவன் என்று சொல்லுவது அறியாமையே யாகும். அல்லது அவன்மீது வீம்புக்காகப் பழி சுமத்தும் கெட்ட எண்ணமாகவாவது இருக்க வேண்டும். குகன் எந்த வர்ணத்தைச் சேர்ந்தவன்? அவன் பிராமணனல்லவே! அவனிடம் ராமன் காண்பித்த அளவு கடந்த அன்பையும் மறந்து ராமன் ப்ராம்மணரல்லாதார்களை வெறுப்பவன் என்று எப்படி சாதிக்க முடியும்?

அவனுடைய நாட்டில் சூத்ரர்களில்லையா? அவர்களெல்லாம் கடவுளைக் காண வேண்டாம் என்ற எண்ணத்துடனு இருந்து வந்தார்கள்? அவர்களையெல்லாம் ராமன் கொன்றுவிட்டானு? "ஊரைவிட்டு வெளியேறுங்கள்" என்று அயல்நாடு செல்லும்படி வெருட்டிவிட்டானு? இவைகளையெல்லாம் பொறுப்புடனும், நியாய விசார புத்தியுடனும் ஆராய்பவர்

களுக்கு ப்ராமணரல்லாதார் என்பதற்காக ராமன் சம்புகனை வெறுத்தான், கொன்றான் என்பதெல்லாம் மிகத் தவறான அபிப்ராயம் என்பது தெளிவாகும்.

கடவுளைக் காண எல்லோருக்கும் உரிமையுண்டு. அவசியம் ஒவ்வொருவரும் தம் தம் வாழ்க்கையில் முயற்சிசெய்யவேண்டிய காரியமாகவும் அது ஆகும். அதை எவரும் மறுக்க முடியாது. ஆனால் உலக ஒழுங்கைத் தீர்க்க தரிசனத்துடன் வகுத்திருக்கும் சாஸ்திரங்களின் முறைகளைக் குலைக்காது அவைகளை மரியாதை செய்யும் வகையில் ஒவ்வொருவரும் நடந்து கொண்டு தம் வாழ்க்கையின் பெரும் பயனைப் பெற முயற்சிக்க வேண்டுமென்பதே அடிப்படையான உலக தத்வம். அதைத் தழுவியே ராமனும் நடப்பவன். அதை மீறித் துணிவுகரமாக நடந்ததால்தான் சம்புகனை ராமன் வெறுத்தான், அவனைக் கொல்லவும் செய்தான்.

### சம்புகன் கடவுளைக்காண ஆசைப்பட்டானா?

உண்மையில் சம்புகன் கடவுளைக்காணும் முயற்சியைச் செய்தவனுமல்ல. தன் (இப்பூவுலக மாமிச) சரீரத்துடனேயே தேவனாக ஆகி, தேவலோகம் சென்று அங்கு வசித்துவர வேண்டுமென்று ஆவல் கொண்டே அவன் (தலைகீழாகத்) தவம் செய்தவன். (ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்—உத்தர காண்டம் ஸர்க்கம் 75, சுலோகம் 14-19) "தைவத்வம் பிரார்த்தயே ராம! ஸசரீரோ மஹாயச:" (ஸர்க்கம் 76, சுலோகம் 2) ஸ்வர்க்க லோகம் என்றும் அங்கு தேவர்களிருக்கின்றனர், அவர்கள் மாதிரி ஆகச் செய்யப்படவேண்டிய விதிகள் எவ்வெவை என்றும் வழிகாண்பித்திருப்பவைகள் சாஸ்திரங்கள் தானே! சம்புகன் சொந்த யுக்தியால் கண்டுகொண்ட விஷயமல்லவே அது! அந்த சாஸ்திரங்கள் முகமாக அவ்வுண்மைகளைக் கண்டுகொண்டவன் அவைக

ளுடைய முறைகளை மட்டும் புறக்கணித்து நடப்பது எப்படிப் பொது நியாயங்களையும் உலக ஒழுங்கையும், மன்னன் வகுத்திருக்கும் கட்டளைகளையும் மரியாதை செய்ததாக ஆகமுடியும்? த்ரிசங்கு மஹாராஜனும் பெறமுடியாத விஷயமாயிற்றே இது!

அரசாங்கச் சட்டங்களையும், சமூகக் கட்டுப்பாடு களையும் மீறி, 'தன் இஷ்டம்' என்று உரிமை வாதம் பேசி பலருடன் உறவாடிக்கொண்டு ஒரு ஸ்திரீ, வாழ்க்கை நடத்திவருவாளாயின் அவளை அரசாங்கம் இஷ்டப்படி நடந்துகொள்ள விட்டுவிட வேண்டியது தானா? அவளுடைய வாழ்க்கை உலக ஒழுங்கைக் கெடுத்துவிடக்கூடும், அமைதியான குடும்ப வாழ்க்கை யையும் சிதைக்குமென அரசாங்கம் அவளைத் தன் வரம்பிற்கு உட்படுத்த முயற்சிக்காமல் இருப்பது நியாயமாகுமா? ஒவ்வொருவரும் தம் தம் இஷ்டப்படி நடக்க வசதி யிருக்கவேண்டுமென்பது நியாயமெனி னும் சில திட்டங்களுடன் வாழ்ந்துவரும் உலகைக் கெடுக்காதவாறு தாங்கள் தங்களுடைய சுதந்திரத் தைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டுமென்ற கொள்கையைப் பொது மக்கள் ஒப்புக்கொண்டு தானே வாழ்ந்துவருகின்றனர்? அப்படி ஒப்புக் கொள்ள மறுப்பவர்களை அரசாங்கம் பலாத்கார மாகக் கட்டுப்படுத்தித்தானே வருகிறது? இவைகளை யெல்லாம் சற்று நிதானமாகக் கவனிப்பவர்களுக்கு சம்புகன் செய்தது தவறென்றும், அவனுடன் வாதம் செய்யாமல் அவனை உடனே கொன்றுவிட வேண்டியது தான் நியாயமாகுமென்று ராமன் நினைத்தது ஆமோதிக்கத் தகுந்ததுதான் என்றும் நிச்சயிக்க நேரிடும்.

பஞ்சபாண்டவர்களில் மூத்தவரான தர்ம புத்ரர், ராஜ்யத்தைச் சுற்றிப் பார்வையிட்டு வரும் சமயம் 'தன் அபிப்ராயம்' என்று ஒருவன் பேசிக்கொண்டிருந்தானும். அதைக் கேட்ட தர்மபுத்ரர் அவனை அழைத்து விசாரிக்காமல்

அவனைத் தாமதிக்காமல் உடனே கொன்றுவிடும்படி உத்திரவிட்டாராம். அரசாங்கச் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டுப் பேசும் தன்மை, உலகில் கற்றுணர்ந்த பெரியோர்களிருக்கின்றனர், தான் பேசுவதும், தீர்மானிப்பதும் அவர்களால் ஒப்புக் கொள்ளப்படும் தன்மையிலிருக்க வேண்டும் என்ற மரியாதை, அடக்கம், அச்சம் எதுவுமின்றி தன்னை மிகப் பெரியவனாக நினைத்துக்கொண்டு பேசும் அஹங்காரத் தன்மையையுடைய அவன் உலகிற்கு பேராபத்தையும் குழப்பத்தையும் உண்டு பண்ணக் கூடியவன், அவனை அரைக்ஷணமேனும் உயிருடனிருக்க விடக்கூடாது என்று அவர் கருதினர் என்று மிகப் பழையதான மஹாபாரத வரலாறு ஒன்று உண்டு. தீர்க்கமாக ஆலோசிப்பவர்களுக்கு அதில் ஆழப் பதிந்து கிடக்கும் உண்மை மிகத் தெளிவாகவே விளங்கும். இக்காலத்திய அரசாங்கமும் பொதுமக்களும் நேராகவோ, மறைவாகவோ இதே கொள்கையை (எவ்வழியிலாயினும்) மதித்து வருகிறவர்களாகத்தான் காணப்படுகின்றனர்.

தான்றோன்றிகளாகவும் துரஹங்காரிகளாகவும் தங்களுக்கு ஒரு நீதி, பிறர்களுக்கு ஒரு நீதியாக நினைத்து நடந்துகொண்டு அதிகமான பணக் கஷ்டத்தால் வாடிக் கிடக்கும் பாமரமக்களை அவர்களுக்கு நன்மைகளைச் செய்கிறவர்கள் போல் அபிநயித்து அவர்களுடைய வயிற்றுச் சோற்றையும் வாழ்க்கையையும் கெடுத்து, அவைகளை வஞ்சகமாகப் பிடுங்கித்தின்று தங்களுடைய வயிற்றை வளர்த்துக்கொண்டு ஆடம்பர உடைகளுடனும் புளிச்ச ஏப்பத்தைப் பெருக்கும் அளவுகடந்த சிற்றுண்டிகளுடனும், நீண்ட மாலைகளுடனும், உயர்ந்த வாகனங்களுடனும் ஊர்சுற்றிவரும் தறுதலைகளுக்கும் தத்தாரிகளுக்கும் அவ்வுயர்ந்த தத்வங்கள் எவ்வாறு புரியப்போகிறது? புரிந்தாலும் எப்படி அவைகளை ஒப்புக்கொண்டு தங்களுடைய சுயநலத்தை அவர்கள் தியாகம் செய்யச் சம்மதிப்பர்?

அவர்கள் எப்படியாவது ஒழியட்டும்! ஒழுங்கான உலகநீதிகளுக்குக் கட்டுப்பட்டு நல்லெண்ணங்களுடன் அமைதியாக வாழவிரும்பும் பொதுமக்களாவது ராமனுடைய குற்றமற்ற உயர்ந்த குணங்களையும் ஸ்ரீ வால்மீகி மஹாமுனிவரால் வரையப்பட்ட அவனுடைய புனிதமான சரித்திரம் காட்டும் வழிகளையும் பின்பற்றி இவ்வுலக இன்பங்களைப் பூராவாக அனுபவித்துப் பிறகு வாழ்க்கையின் மறுமைப்பயன்களையும் நன்கு அனுபவிக்க வழிதேடிக் கொள்ளப் பாடுபடட்டும் என நினைத்து இச்சிறிய நூலை நாம் வரையப் புகுந்தோம். நமக்கும், எல்லோருக்கும் அவ்வனைத்தும் கிட்டுமாறு ஸீதாஸமேதனான ஸ்ரீராமசந்திரன் என்றும் துணையிருந்து அருள் புரியட்டும்!

சுபம்.

RAJAH POWER PRESS, MADRAS-14.

# ஒரே ரூபாய்

தங்களுடைய சொந்தக் குடும்பக் காரியத்தில் அக்கறைப்படுவதுபோல் தாங்கள் பிறந்த சமூகத்தின் நலனையும் கவனிக்க ஒவ்வொருவரும் கடமைப் பட்டுள்ளனர். கால, தேச, வர்த்தமானங்களினுல் அநேகருக்கு அந்த மாதிரி செய்ய வசதி ஏற்படாமல் இருக்கலாம். ஆயினும் சமூகத்திற்கு ஊழியம் செய்ய முன் வந்தவர்களை பலவிதத்திலும் உதவி, உத்ஸாகம் உண்டு பண்ணுவதின் மூலம் அக் கடமையைப் பூர்த்தி செய்து கொள்ளலாம்.

அவ்வித சமூகத்தொண்டை தார்மிக ஹிந்து மிஷன் செய்து வருகிறது. இதுபோன்ற புஸ்தகங்களை பிரசுரிக்கும் வேலை அதன் ஒரு பகுதி. இதற்கும், வேறு வகைகளான அதன் வேலைக்கும் நிரம்பப் பண உதவி தேவை. அதில் எல்லோரும் கலந்து கொள்ள வேண்டியதும் அவசியம். ஆகையால் ஒவ்வொரு ஹிந்துவும் வருஷத்திற்கு ஒரே ரூபாய் கொடுத்து உதவினுலே போதுமானது. தங்களையும் தங்களுடைய சமூகத்தையும் பாதுகாத்து வளர்க்கச் செய்யப்படும் பேருதவியாக இது ஆகும். இதை அன்புடன் செய்யுமாறு ஒவ்வொருவரையும் தார்மிக ஹிந்து மிஷன் வேண்டிக்கொள்ளுகிறது. இவ்வண்ணம் இது வரை உதவி வந்திருக்கிறவர்களுக்கும் அது தன் நன்றியையும் வந்தனத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறது.

ஸ்தாபகர்

தார்மிக ஹிந்து மிஷன்

சென்னை-15

## தார்மிக ஹிந்து

நாட்டைக் கெடுத்து அதில் பிளவை உண்டுபண்ணி, பகுத்தறிவின் பெயரால் வஞ்சகமாகப் பேசி, எழுதி, மக்களை ஏமாற்றிப் பிழைத்து வரும் நாசகார வம்புக் கழகங்களின் துர்வாதங்களை தகர்த்தெறிந்து நற்கருத்துக்களைப் பரப்பும்

தமிழ் வாரப் பத்திரிகை

தனிப் பிரதி ரூ. 0—1—3
வருஷச் சந்தா ரூ. 5—0—0

மானேஜர்

**தார்மிக ஹிந்து**

சென்னை-15

## வால்மீகி கண்ட ஸீதை

ஈரோட்டு நாயக்கர்—நடிக ராதா ராமாயணப் பித்தலாட்டப் பிரசாரங்களை அம்பலப்படுத்தும் புத்தகம். பிரபல வித்வான்களும், அரசியல் தலைவர்களும், பத்திரிகைகளும் இப் புத்தக்த்தை பாராட்டியிருக்கின்றனர்.

விலை 2 அணா

(தபாற்செலவுடன் 3 அணா)

**தார்மிக ஹிந்து மிஷன்**

சென்னை-15